# பாரதியும் கவிதையும்

எழுதியவர்
பாரதியாரின் அருமைப் புதல்வி
தங்கம்மாள் பாரதி

புதுமைப் பதிப்பகம் லிமிட்டெட்
காரைக்குடி

# பதிப்புரை

தமிழ் நாட்டிற்கும் தமிழ் மொழிக்கும் புதியதொரு உத்வேகத்தைக் கொடுத்து தமிழ் மக்களை உறக்கத்திலிருந்து தட்டி யெழுப்பியவர்களில் தலைசிறந்தவர், நமது தேசிய கவி சி. சுப்ரமணிய பாரதியார். அவருடைய கவிதைகள், கட்டுரைகள், விமர்சனங்கள் முதலியவற்றைப் படித்துப் படித்து, அதனால் ஒரு புத்துணர்ச்சி பெற்று, தமிழர்கள் ஒரு படி மேலே உயர்ந்திருக்கிறார்கள் என்று சொன்னால் அது மிகையாகாது.

அத்தகைய பெரியாருடைய வாழ்க்கையில் ரஸமான பல சம்பவங்கள் நிகழ்ந்திருக்கக் கூடும்; நிகழ்ந்தும் இருக்கின்றன. அவற்றைத் தமிழ் மக்கள் தெரிந்துகொள்ள ஆவல்கொள்வது இயல்பே. பாரதியாரின் அருமைப் புதல்வி ஸ்ரீமதி தங்கம்மாள் பாரதி அவர்கள், தமது தந்தையார் வாழ்க்கையில் நடந்த ரஸமான பல சம்பவங்களைத் தொகுத்து, புத்தக வடிவில் நமக்கு அளித்துள்ளார்.

எங்கெந்த நேரத்தில், எப்படி எப்படி யெல்லாம் தமது தந்தையார் கவிதைகள் எழுதினார், அவருடைய உள்ளத்திலிருந்து கவிதை ஊற்று எப்படி யெப்படி யெல்லாம் பெருக்கெடுத்து ஓடியது, அவரோடு தொடர்புகொண் டிருந்தவர்களிடையே அவருடைய உபதேசங்கள் எவ்வாறு பரவின, அவர்களை அவை எவ்வாறு ஊக்கி உற்சாகப்படுத்தின, வாழ்க்கையை அவர் எவ்வாறு ரசித்தார் என்பனபோன்ற உண்மை

யான பல நிகழ்ச்சிகளை அடிப்படையாகக்கொண்டு, தெளிந்த தமிழ்நடையில், சுவை குன்ருது ஸ்ரீமதி தங்கம்மாள் பாரதி எழுதி இருக்கிருர்.

இத்தகைய புத்தகங்கள், பாரதியாரின் மேதா விலாசத்தை அறிய உதவியாய் இருக்கும் என்பது எங்கள் துணிபு.

காரைக்குடி
8—3—'47

புதுமைப் பதிப்பகத்தார்

# பொருளடக்கம்

# வேள்வி

நமது இடைக் காலத்தில்—அதாவது பாரதியார் காலத்திற்குச் சிறிது முன்பாகவுள்ள காலத்தில்—ஜாதிப் பொய்களும், சமய வாதங்களும், வீண் பெருமைகளும் அதிகரித்திருந்தன. மடத்தனமான விஷயத்தை மகிமை பொருந்தியதென்று மாந்தர் கருதிய காலம் அது. எதற்கெடுத்தாலும், ஒரு சின்ன விஷயத்திற்குக்கூட, போன ஜன்ம புண்ய கர்ம பலன்களைக் கூறிச் சமாதானப்படும் நாள்; முயற்சியின்றி, சோம்பல் மிகுந்து, தொழில்கள் சிதைந்து, கலைகள் மங்கி, அந்நிய மோகம் தலைவிரித்தாடிய சமயம்; வழக்கம் என்பதற்காக மனதறிந்து இகழத்தக்க காரியங்களைச் செய்கின்ற சமயம்; பாரதியார் இதையெல்லாம் அழிப்பதற்காகப் பிறந்தவர். இந்த மாசுகளைத் தொலைத்து, வேத காலத்து வாழ்க்கையை உலகிற்கு அளிக்க ஆவல்கொண்டார். அவர் அமரன். உண்மை அமரனாக ஆனாலல்லாமல், கேவலம் கற்பனை செய்த மாத்திரத்திலேயே அமர வாழ்வெய்த முடியாதென்று நினைத்தார். ரிஷிகள் காலத்து நூல்களை யெல்லாம் ஆராய்ந்தார். அந்த ஆராய்ச்சிக்கு அரிய துணையாக அரவிந்தர் பாரதியாருக்குக் கிடைத்தார். பின்பு, அழிவில்லாத—நமது ஹிந்து சமுதாயத்திற்கு, அது நிலைத்திருப்பதற்கு—ரிஷிகளும் அவர்கள் பரிசுத்த வாழ்வுமே காரண மென்றுணர்ந்து, அவர்கள் சொற்களாகிய மந்திரங்களைப் படித்து, அறிந்து இயற்றிய பாடல் "எங்கள் வேள்வி" என்ற பாட்டு. அந்தப் பாட்டு பார்வைக்கு அஸுர - தேவ [ரிஷிகள்] சம்பாஷணையை யொத்திருக்கிறது. வாழ்க்கைக்கு இன்றிமையாதது, நல்ல

குணங்கள். வாழ்நாளை நரகமாக்குவது பொறாமை, பகை, அச்சம். ஆதலால், எப்போதும் இந்தக் குணங்கள் போரிட்டுக்கொண்டே யிருக்கும். மனத்தை மாசுபடுத்தும் குணங்களை அஸுரர்களாக வைத்து, நல்ல எண்ணங்களையும் செய்கைகளையும், தேவர்களாகப் பாவித்துப் பாடியது அந்தப் பாட்டு. முதலில் தன் மனப்பகையைக் கொன்று, தமோ குணத்தை வென்றுவிட்டால், மனிதன் அமரன் ஆவான் என்ற உண்மையை - தான் அனுபவித்து அறிந்த உண்மையை - உலகத்தாருக்குப் பறைசாற்றினார். கல்விக் கடலில் ஞானமுதம் கடைந்தெடுத்து, அதை உண்ண ஓட்டாமல் தடுக்கும் பகையாகிய அஞ்ஞானத்தை மண்டையிலடித்துக் கொன்றுவிட்டு, அன்பெனும் அமுதத்தை யுண்டால், மானிடன் புத்துயிர் பெற்றுப் பொலிவான் என்று கூறுவார்.

"வேள்வி"

ரிஷிகள்:— **எங்கள் வேள்விக் கூட மீதில்**
**ஏறுதே, தீ! தீ!—இந் நேரம்**
**பங்க முற்ற பேய்க ளோடப்**
**பாயுதே, தீ! தீ!—இந் நேரம்.**

அஸுரர்:— **தோழரே! நம் ஆவி வேக**
**சூழுதே, தீ! தீ!—ஐயோ நாம்**
**வாழ வந்த காடு வேக**
**வந்ததே, தீ! தீ!—அம்மாவோ.**

எங்கள் தந்தை மெய்மறந்து பாடும்போது, நான் குழந்தையானபடியால், நிஜமாகவே ஒரு திருட்டுக் கூட்டத்தார் தீயினால் சூழப்பட்டு வாடுவது போன்ற உணர்ச்சி எனக்கு ஏற்படும். இதை யுணர்ந்த எங்கள் அப்பா, வேடிக்கையாக, "அச்சந் தவிர்" என்பார். பின்புதான் வெறும் பாட்டு என்ற உணர்ச்சி ஏற்படும்.

## தாயின் வேண்டுகோள்

ஒரு நாள் சென்னையிலிருந்து சில நண்பர்கள் தந்தையாரைப் பார்ப்பதற்காக வந்திருந்தார்கள். அதில் இருவர் ஆங்கில பாஷையிலும் 'ஸயன்ஸி'லும் மோகம்கொண்டவர்கள். கிணற்றடியில் அப்போது தந்தை ஸ்நாநம் செய்து கொண்டிருந்தார். நண்பர்கள் மாடியிலிருந்து சம்பாஷித்துக்கொண்டிருந்தனர்.

முதலாவது நண்பர் :—என்னப்பா! பாரதியாருக்குத் தமிழில் மோகம் அதிகமாமே! தமிழில் என்ன இருக்கிறது? கருத்துக்களை ஆங்கிலத்தில் சொல்வதுபோல, தமிழில் சொல்ல முடியவில்லை. அதற்கேற்ற அழகான சொல் தமிழ் மொழியில் ஏது?

இரண்டாம் நண்பர் :—அது மட்டுமா? 'ஸயன்ஸ்' எத்தனை உயர்ந்தது? தமிழில் இருக்கிறதா? வெள்ளைக்காரன் எப்படியிருந்தாலும் கெட்டிக்காரன். எத்தனை புதிய புதிய மெஷின்கள்! எத்தனை கருவிகள்! எத்தனை வஸ்துக்கள் கண்டுபிடித்திருக்கிறார்கள்! எத்தனை சாஸ்திரங்கள் கற்கிறார்கள்!

முதலாவது நண்பர் :—ஆமாம். இன்னும் சிறிது நாளைக்குள் மேற்கு தேசத்துப் பாஷைகள் நாடெங்கும் விரிந்து பரவிவிடும். தமிழ் ஒளிமங்கி மறைந்துவிடும்.

இரண்டாம் நண்பர்:—ஆம். ஒருவரும் அதில் சிரத்தையில்லாமலிருந்தால் விரைவில் அழிந்துவிடும். மேலே கூறிய சம்பாஷணைகளை மௌனமாகக் கேட்டுக்கொண்டிருந்தார் அப்பா. கேட்டவுடன் கண்களிலிருந்து கண்ணீர் தாரை தாரையாய்ப் பெருகிற்று. தனக்குள்ளாகவே பேசிக் கொண்டார்.

"ஆம். வாஸ்தவம்தான். தாயை மதியாத நம் தமிழ னின் அசிரத்தையால் தமிழ் அழியும். கோழைகளே! பழம் பெருமையோடு திருப்தியடைந்து, உண்பதும் உறங் குவதுமாகக் காலங்கழிக்கிறீர்களே! என்ன கொடுமை! ஒருவனுவது நாட்டு நிலைமையைப்பற்றி யோசிக்கிருனு! நமது நிலை இத்தனை கீழ்த்திசை யடைந்திருக்கிறதே என்று சிந்தித்துப்பார்க்கிருனு? தாய் மொழியில் பேசுவ தும் எழுதுவதும் கேவல மென்று கருதி, தெரியாத ஆங்கிலத்தில் உளறினுலும் மதிப்பு என்று நினைக் கிருர்கள்! சேர, சோழ, பாண்டியர்கள் போற்றி வளர்த்த தமிழின் பெருமையை அறியாத பேதைகள்! இலக்கிய வளர்ச்சியில் ஒருவரது மூளையும் செல்வதில்லை. பிழைப்புக் காகக் கட்டாயமாக ஆங்கிலங் கற்று, அதிலுள்ள சுவை யைப் புகழ்கிருர்களே!

ஸ்நாநம் செய்து முடிந்ததும் மாடியிலுள்ள நண்பர் களிடம் சென்ருர். "தம்பிமாரே! என்ன சொன்னீர்கள் நம் தாய்மொழியைப்பற்றி? மெல்ல மெல்லத் தமிழ் இறந்துவிடும்என்கிறீர்கள்! ஒரு நாளும்அவ்விதம் ஆகாது. தமிழ் மொழி மங்காது. இன்னும் சிறிது காலத்தில் தமிழர் விழித்தெழுவார்கள். அப்போது தமிழ் மொழி புதுமைப் பொலிவுடன் பிரகாசிக்கும். இதோ கேளுங்கள்! தமிழ்த் தாய் தோன்றிய விதம் யாரும் அறியார்கள்."

"யாரும் வகுத்தற் கரிய பிராயத்தள்
ஆயினுமே எங்கள் தாய்—இந்தப்
பாருளெந் நாளுமோர் கன்னிகை யென்னப்
பயின்றிடுவாள் எங்கள் தாய்—" எங்கள் தாய்!"

கேளீர்! சகோதரரே! தமிழ்த் தாய் கூறுவதைக் கேளுங்கள்!

ஆதிசிவன் பெற்று விட்டான்—என்னை
ஆரிய மைந்தன் அகத்திய னென்றோர்
வேதியன் கண்டு மகிழ்ந்தே—நிறை
மேவும் இலக்கணம் செய்து கொடுத்தான்.

2. மூன்றுகுலத் தமிழ் மன்னர்—என்னை
மூண்ட நல்லன்பொடு நித்தம் வளர்த்தார்;
ஆன்ற மொழிகளி னுள்ளே—உயர்
ஆரியத் திற்கு நிகரென வாழ்ந்தேன்.

3. கள்ளையும் தீயையும் சேர்த்து—நல்ல
காற்றையும் வான வெளியையும் சேர்த்துத்
தெள்ளு தமிழ்ப் புலவோர்கள்—பல
தீஞ்சுவைக் காவியம் செய்து கொடுத்தார்.

4. சாத்திரங்கள் பல தந்தார்—இந்தத்
தாரணி யெங்கும் புகழ்ந்திட வாழ்ந்தேன்;
நேத்திரம் கெட்டவன் காலன்—தன்முன்
நேர்ந்த தனைத்தும் துடைத்து முடிப்பான்;

5. நன்றென்றுந் தீதென்றும் பாரான்—முன்பு
நாடும் பொருள்கள் அனைத்தையும் வாரிச்
சென்றிடுங் காட்டுவெள் ளம்போல்—வையச்
சேர்க்கை யனைத்தையும் கொன்று நடப்பான்.

6, கன்னிப் பருவத்தில் அந்நாள்—என்றன்
காதில் விழுந்த திசைமொழி யெல்லாம்
என்னென் னவோபெய ருண்டு—பின்னர்
யாவும்அழிவுற் றிறந்தன கண்டீர்.

7. தந்தை யருள் வலியாலும்—முன்பு
சான்ற புலவர் தவவலி யாலும்
இந்தக் கணமட்டும் காலன்—என்னை
ஏறிட்டுப் பார்க்கவும் அஞ்சி யிருந்தான்.

8. இன்னொரு சொல்லினைக் கேட்டேன்—இனி
 ஏது செய்வேன்? எனதாருயிர் மக்காள்!
கொன்றிடல் போலொரு வார்த்தை—இங்கு
 கூறத் தகாதவன் கூறினன் கண்டீர்.

9. " புத்தம் புதிய கலைகள்—பஞ்ச
 பூதச் செயல்களின் நுட்பங்கள் கூறும்
மெத்த வளருது மேற்கே—அந்த
 மேன்மைக் கலைகள் தமிழினில் இல்லை;

10. சொல்லவுங் கூடுவ தில்லை—அவை
 சொல்லுந் திறமை தமிழ்மொழிக் கில்லை;
மெல்லத் தமிழினிச் சாகும்—அந்த
 மேற்கு மொழிகள் புவிமிசை யோங்கும் "

11. என்றந்தப் பேதை யுரைத்தான்—ஆ ஆ!
 இந்த வசைஎனக் கெய்திட லாமோ?
சென்றிடுவீ ரெட்டுத் திக்கும்—கலைச்
 செல்வங்கள் யாவுங் கொணர்ந்திங்கு சேர்ப்பீர்.

12. தந்தை யருள் வலியாலும்—இன்று
 சார்ந்த புலவர் தவவலி யாலும்
இந்தப் பெரும்பழி தீரும்—புகழ்
 ஏறிப் புவிமிசை என்று மிருப்பேன்

என்று கோபமும், ஆத்திரமும், சோகமும் கலந்த குரலில் பாடினார். நண்பர்கள் இதைக் கண்டு, வெட்கி " சுவாமி! அறியாமல் கூறினோம். இன்றையத் தினத்திலிருந்து தாய்மொழி வளர்ச்சிக்காகப் பாடுபடுவோம் " என்று வணங்கினர்.



# கடவுளின் ஸ்பரிசம்

ஓர் நாள் அதிகாலை வசந்த காலம். காலையில் எழுந்து கடற்கரை சென்று ஆதித்தனைத் தொழுவது என் தந்தை யார் வழக்கங்களில் ஒன்று. கடற்கரை அருகேயுள்ள வீதி களில் பிரஞ்சுக்காரர்களும் ஆங்கிலோ இந்தியரும் வசிக் கிறார்கள். பாபு அரவிந்த கோஷ் வசிப்பதும் அந்த வீதியில் தான். அங்குள்ள பங்களாக்களிலிருந்த ஒருவரும் இன்னும் விழித்தெழவில்லை. ரமணீயமான சங்கீதம், கடல் அலைகளி லிருந்து கவியின் காதுகளுக்கு மட்டும் கேட்டது. அங்கு படர்ந்திருந்த கொடி, செடிகளின் புஷ்பங்கள் மலர்ந்து உஷா தேவியின் வருகையில் தங்களுக்குண்டான ஆனந் தத்தை வெளியிட்டன. கடற்கரை வழியே நடந்தோம். எங்கள் கால்களை அலைகள் வந்து நனைப்பது பிரம்மானந் தமா யிருந்தது.

தந்தை இதை அறிந்து, "தங்கம்மா! கடவுள் தரி சனம் செய்வது கஷ்டம். மிகவும் கடினம். அதற்கு அனேக வருஷம் கொடூரமான தவம் செய்ய வேண்டும். அப்படியும் சிலருக்குத்தான் தரிசன பாக்கியம் கிட்டும் என்று ஓயாமல் கூறிக்கொண் டிருக்கிறார்களே! இப்போது இந்த மனோகர மான காலை வேளையில் நமது கால்களை இந்த அலைகள் வந்து தொடுவது எத்தனை சுகமாயிருக்கிறது! அன்னை யின் அருள் கரங்களின் ஸ்பரிசம். கடவுள் தனது ஒவ்வொரு செய்கையினாலும் மனிதருக்கு இன்பத்தை யளிக்கிறார். நம் அஞ்ஞானத்தினால் அதை உணர முடிய வில்லை. க்ஷயரோகி எத்தனையோ மருந்துகள் சாப்பிடு கிறான். வருஷக்கணக்கில் நோய் குணமாவதில்லை. டாக்டர் மதனபள்ளிக்குப் போ என்று உத்தரவு இடுகிறார். மதனப் பள்ளியில் எதனால் நோய் குணமாகிறது? நம் ஊரிலுள்ள

டாக்டருக்குத் தெரியாத மருந்தா இருக்கப்போகிறது? இல்லை. நல்ல காற்று, பிராணவாயு அங்கு இருக்கிறது. இங்கு நமது நகரங்களில் காற்றை மக்கள் அசுத்தப்படுத்தி விடுகிருர்கள். பஞ்ச பூதங்களையும், கொஞ்சங்கூட யோசியாமல் மனிதர் அசுத்தம் செய்கின்றனர். காற்றை எத்தனை சிறப்பாக நமது முன்ஞேர் போற்றினர். அவர்கள் ஆரோக்யத்திற்கும் பகவத் தரிசனத்திற்கும் பாத்திரமாயிருந்தார்கள். நாம் இப்போது கடவுள் என்ருல் கல்லிஞலாகிய சிலை, அல்லது உலோகத்திஞலாகிய பிம்பம் என்று கருதுகிருேம். அதஞல் இயற்கைத் தெய்வத்தை நம்மால் அறிய முடியவில்லை. இப்போது நம் கால்களை அன்புடன் வருடுவது அலை யல்ல; பராசக்தியின் கரங்கள் என்று அறி! நமது உடம்பில் படும் இந்தக் காற்று, நம்மைத் திடம் அடையச் செய்வதற்குத் தாய் விசிறும் இளந்தளிர் விசிறி.''

"அப்பா! இவைகளை விவரமாகப் பாடல் மூலமாகத் தெரிவிக்க வேண்டும்'' என்றேன். சரி, அதன் கருத்தை இப்போது சொல்கிறேன். பாட்டு வீட்டுக்குப் போய் எழுதலா மென்ருர்.

ஆஹா, என்னென்று புகழ்வது அன்னையின் அருளை! உண்பதற்கு எத்தனைவித உணவுப்பொருள்கள்! வயிற்றுக்குணவு கொடுத்தபின் செவிக்குணவு, காஞமுதம். உயிரைக்கூட இலட்சியம் செய்யாமல் நமக்கு உதவுகின்ற நண்பர்கள். பக்தியெனும் அனுபவத்தைப் பாரிலுள்ள எல்லா மாந்தரும் அறியும்படி, காதல் புரியக் கன்னியர்கள்! வர்ணக் களஞ்சியத்தை நாம் தெரிந்துகொள்ளுவதற்காக வானத்திலும், புஷ்ப ஜாதியிலும் எத்தனை வர்ணஜாலம்! பராசக்தி தனது லீலா விநோதத்திற்காக ஏற்படுத்திய வர்ண வித்தியாசங்களை மனிதர் ஜாதி வேற்றுமைக்கு உபயோகப்படுத்துகிருர்கள். வர்ணங்களும்கூட, பச்சை நீலமாகும். நீலம் பச்சையாக மாறும். உள்ளுக்குள் சிவப்புத் தோன்றும். மேலே கண்கள் கூசும்படி ஜோதிவிட்டு

ஒளிவீசும். நான் சொல்வது விளங்கவில்லையா? வைரத்தை எடுத்துப் பார்; அதைப் பொதுவாக வெள்ளை நிறமென்று கூறுகிறார்கள். ஆனால், வெண்மை நிறம் மட்டுந்தானா அதில் தெரிகிறது? எத்தனை நிறம் அதில் தோன்றுகிறது? அதைத்தான் கூறுகிறேன். வண்ணங்கள் வேற்றுமைப் பட்டால், அதில் மானிடர் வேற்றுமையில்லை என்பதைத் தெரிந்துகொள்ளும் பொருட்டேதான் அன்னை வர்ணங் களை ஏற்படுத்தி யிருக்கிறாள். இது மட்டுமா? பேசும் நண் பர்களைக் காட்டிலும் பேசா நண்பர்களைக் கணக்கில்லா மல் படைத்திருக்கிறாள். நான், அது"யாரப்பா"என்றேன். "நதிகள், நக்ஷத்திரங்கள், மலைகள், [அஞ்சா நெஞ்சு படைத்து, சிரம் நிமிர்ந்து, மோன நிலைமையில் நிற்கப் பழகு வதற்குச் சாதகமா யிருக்கின்றன.] விருக்ஷங்கள் பரோப காரத்தையே இலட்சியமாகக்கொண்டு நிற்கின்றன. நமக்கு ஒரேவித வாழ்க்கை ருசிக்காதென்று,இன்பதுன்பங் களையும், வெற்றி தோல்விகளையும் மாறிமாறி ஏற்படுத்தி, மனத்தை மாசு நீக்கிவிடுகிறாள் தாய். மனிதன் கட்டுநீங்கி விடுதலை பெறுவதற்குப் பறவை யினத்தைப் பார்த்துக் கொள்ளலாம். பொய்யில்லாவிடில் மெய் சோபிக்காது. தீது இல்லாவிட்டால் நல்லது சுவையிராது. அதற்காக அஞ்ஞானத்தையும் அதைக் கொளுத்தும் ஞானத்தையும் உண்டாக்கி என்னை உய்வித்தாள்" என்றார். இதைக் கேட்டதும் எனக்கு அளவில்லாத மகிழ்ச்சி யுண்டாகியது. வீட்டுக்கு வந்ததும் இவ் வெண்ணம் எல்லாம் பாட்டாக மாறியது.

## கண்ணன்—என் தாய்

உண்ண உண்ணத் தெவிட்டாதே—அன்னை
உயிரெனும் முலையினி லுணர்வெனும் பால்
வண்ண முறவைத் தெனக்கே—என்றன்
வாயினிற்கொண் டூட்டுமோர் வண்மை யுடையாள்

கண்ண னெனும் பெயருடையாள்—என்னைக்
கட்டிநிறை வானுந் தன்கையி லணைத்தே
மண்ணெனுந்தன் மடியில் வைத்தே—பல
மாயமுறுங் கதை சொல்லி மனங் களிப்பாள்.'

இன்பமெனச் சில கதைகள்—எனக்
கேற்றமென்றும் வெற்றியென்றும் சில கதைகள்
துன்பமெனச் சில கதைகள்—கெட்ட
தோல்வியென்றும் வீழ்ச்சியென்றுஞ் சில கதைகள்
என்பருவம் என்றன் விருப்பம்—எனும்
இவற்றினுக் கிணங்க வென்னுள மறிந்தே
அன்பொடவள் சொல்லி வருவாள்—அதில்
அற்புத முண்டாய்ப் பரவச மடைவேன்.

விந்தை விந்தை யாக வெனக்கே—பல
விதவிதத் தோற்றங்கள் காட்டு விப்பாள்:
சந்திரன் என்றொரு பொம்மை—அதில்
தண்ணமுதம் போல வொளி பரந்தொழுகும்;
மந்தை மந்தை யாய்மேகம்—பல
வன்னமுறும் பொம்மையது மழை பொழியும்;
முந்த ஒரு சூரியனுண்டு—அதன்
முகத்தொளி கூறுதற் கோர் மொழியிலையே.

வானத்து மீன்க ளுண்டு—சிறு
மணிகளைப்போல் மின்னி நிறைந் திருக்கும்;
நானத்தைக் கணக் கிடவே—மனம்
நாடிமிக முயல்கினுங் கூடுவ தில்லை.
கானத்து மலைக ளுண்டு—எந்தக்
காலமு மோரிடம் விட்டு நகர்வதில்லை
மோனத் திலே யிருக்கும்—ஒரு
மொழி யுரையாது விளையாட வருங்காண்!

நல்ல நல்ல நதிகளுண்டு—அவை
நாடெங்கு மோடி விளையாடி வருங்காண்
மெல்ல மெல்லப் போயவைதாம்—விழும்
விரிகடற் பொம்மையது மிகப் பெரிதாம்
எல்லை யதிற் காணுவதில்லை—அலை
எற்றி நுரை கக்கியொரு பாட்டி சைக்கும்;
ஒல்லெனு மப்பாட்டி னிலே—அம்மை
ஓமெனும் பெயரென்றும் ஒலித்திடுங் காண்.

சோலைகள் காவி னங்கள்—அங்கு
சூழ்தரும் பலநிற மணி மலர்கள்
சாலவு மினியன வாய்—அங்கு
தருக்களில் தூங்கிடும் கனி வகைகள்
ஞால முற்றிலு நிறைந்தே—மிக
நயந்தரு பொம்மைகள் எனக் கெனவே
கோலமுஞ் சுவையு முற—அவள்
கோடிபல கோடிகள் குவித்து வைத்தாள்.

தின்றிடப் பண்டங் களும்—செவி
தெவிட்டறக் கேட்க நற் பாட்டுகளும்
ஒன்றுறப் பழகு தற்கே—அறி
வுடையமெய்த் தோழரு மவள் கொடுத்தாள்
கொன்றிடு மென இனிதாய்—இன்பக்
கொடு நெருப்பாய், அனற் சுவையமுதாய்
நன்றியல் காதலுக்கே—இந்த
நாரியர் தமைஎனச் சூழ வைத்தாள்.

இறகுடைப் பறவை களும்—நிலந்
திரிந்திடும் விலங்குகள் ஊர்வனகள்
அறைகடல் நிறைந் திடவே—எண்ணில்
அமைத்திடற் கரிய பல்வகைப் படவே

சுறவுகள் மீன் வகைகள்—எனத்
தோழர்கள் பலருமிங் கெனக் களித்தாள்
நிறைவுற இன்பம் வைத்தாள்—அதை
நினைக்கவு முழுதிலுங் கூடுவதில்லை.

சாத்திரங் கோடி வைத்தாள்—அவை
தம்மினு முயர்ந்ததோர் ஞானம் வைத்தாள்
மீத்திடும் பொழு தினிலே—நான்
வேடிக்கை யுறக்கண்டு நகைப்ப தற்கே
கோத்த பொய் வேதங்களும்—மதக்
கொலைகளும் அரசர் தம் கூத்துக்களும்
மூத்தவர் பொய் நடையும்—இள
மூடர்தம் கவலையு மவள் புனைந்தாள்.

வேண்டிய கொடுத் திடுவாள்—அவை
விரும்புமுன் கொடுத்திட விரைந் திடுவாள்
ஆண்டருள் புரிந்திடுவாள்—அண்ணன்
அருச்சுனன் போலென்னை யாக் கிடுவாள்
யாண்டு மெக் காலத்திலும்—அவள்
இன்னருள் பாடு நற்றொழில் புரிவேன் ;
நீண்டதொர் புகழ் வாழ்வும்—பிற
நிகரறு பெருமையு மவள் கொடுப்பாள்.



# அழகுத் தெய்வம்

ஆஹா! மனதில்தான் சிறிது நேரத்திற்குள் என்னென்ன போராட்டங்களெல்லாம் நடைபெறுகின்றன! சித்திரவதை! உடனே உல்லாசம். ஒவ்வொரு உணர்ச்சியையும் மற்றவருக்கு உணர்த்துவது என்பது சாத்தியமா? முடியவே முடியாது. அப்படியே அவர்கள் உணர்ந்தாலும், நம்மை அவர்களால் சமாதானப்படுத்த முடியுமா? சின்ன விஷயமானாலும் தன்னைத் தானே சமாதானப்படுத்திக்கொள்ள வேண்டுமே தவிர, மற்றவரால் முடியாது. மனம் திரும்பத் திரும்ப நம் பலஹீனத்தைச் சொல்லியழும்பொழுது என்ன செய்வது? ஒரு சமயம் மனத்தைக் கண்டு இரக்கம், மறு சமயம் கோபம். கோபம் மிஞ்சிய பின்தான் திடவைராக்யம் ஏற்படுகிறது.

என்ன நடக்கும்? எப்படி நடக்கும்? பாரத நாட்டிற்கு விமோசனம் என்று ஏற்படும்? என்று நம் மக்கள் பேடித்தன்மை போய், ஆண்மையுற்றவ ராவார்கள்? பழைய பொய் அழித்து, புது வீரம் பிறக்க வேண்டும். இதற்கு என்ன வழி செய்வது? நான் கட்டுண்டு கிடக்கிறேனே, மஹாசக்தி! மனத்தை அறுக்கும் இந்த விஷயத்திற்கு ஒரு விடிவு காணேனே! இந்த ஏக்கத்தினூடே சிறு நித்திரை. உடனே கண் விழித்தேன். மனம் தெளிந்தது. கனவில் பராசக்தி கனிவுடன் தோன்றினாள். நீல வானில், மங்கிய நிலவு காய்ந்தது. அடே பாரதி! தூங்காதே! எழுந்தென்னைப் பார்! என்றாள். திடுக்கிட்டு நன்றாக உற்றுப்பார்த்தேன். என்ன விந்தை! அந்தப் பதினாறு வயது மங்கையை எங்ஙனம் வருணிப்பது? வர்ணிக்க எனக்குத் திறமில்லை. "அழகுத் தெய்வம்" இவள்தான்.

உடனே என் மனம் அவள் அழகில் மயங்கிமோகமுற்றதா? இல்லை. பராசக்தி நம் சந்தேகங்களை நீக்கவந்தாள். உடனே கேள்விக்கு ஆரம்பித்தேன்.

தாயிடம் எதிரெதிராகக் கேட்பதைக் காட்டிலும் பொதுவாகக் கேட்கலா மென்று தோன்றியது. அதற்காக "தாயே! பயிர்களின் தாகத்தை அறிந்துதான் மழை பொழிகிறதா, அல்லது ஈகைக் குணத்தின் பேரிலா? இல்லையெனில் பெய்ய வேண்டும் என்ற நியதிக்காகப் பெய்கிறதா?" அதற்கு அவளிடமிருந்து சரியான பதில் கிடைக்கவில்லை. "காலத்தின் விதி மதியைக் கடந்திடுமோ?" "மகனே! காலம்தான் மதிக்குக் கருவி. காலத்தை மதியின் திறமையினால் உனக் கேற்ற கருவியாக்கிக் கொள்ளலாம்." கடைசியாக மித மிஞ்சிய ஆத்திரத்துடன் [நான்] "ஞாலத்தில் விரும்பி யது நண்ணிடுமோ?" [அவள்] "நாலிலே ஒன்றிரண்டு பலித்திடலாம்." சில சமயம் நமக்கு அன்பர்களையும், பிரிய முள்ளவர்களையும் கண்டால் வாயிலிருந்து வார்த்தை வருவ தில்லை. மனத்தினாலேயே சம்பாஷித்துவிடுகிறோம். அதைப்போல் பராசக்தியிடம் எத்தனையோ கேள்வி கேட்க வேண்டு மென்றிருந்த எனக்கு ஒன்றும் நினைவு வர வில்லை. கடைசியில் "அன்னையே! என் இதயம் உனக்கு விளங்கவில்லையா? நான் சொல்லித்தான் உனக்குத் தெரிய வேண்டுமா?" என்றேன். "முழு மனத்தோடு நினை. உன் எண்ணம் கைகூடும்" என்றாள் அருள் தெய்வம். அழகுத் தெய்வத்தின் முகமலர்ச்சியைக் கண்டு அருள் பெற்று, என் மனச்சோர்வு அகன்றது. அந்தக் கனவிலிருந்து விழித்து சிறிது நேரமாகியும் என் கேள்வியும் பதிலும் மனதைவிட்டு அகலவில்லை. இதோ "பாட்டு" என்று நடு இரவில் என்னை எழுப்பி, மேலே சொன்ன விஷயங்களை யும் சொல்லி, பாட்டையும் பாடிக் காட்டினார் என் அரு மைத் தந்தை பாரதியார்.

மங்கியதோர் நிலவினிலே
கனவிலிது கண்டேன்;
வயதுபதி னாறிருக்கும்
இளவயது மங்கை.

பொங்கிவரும் பெருநிலவு
போன்ற ஒளிமுகமும்
புன்னகையின் புதுநிலவும்
போற்றவருந் தோற்றம்!

துங்கமணி மின்போலும்
வடிவத்தாள் வந்து,
"தூங்காதே! எழுந்தென்னைப்
பார்!" என்று சொன்னாள்.

அங்கதனில் கண்விழித்தேன்
அடடா! ஓ அடடா!
அழகென்னும் தெய்வந்தான்
அதுவென்றே யறிந்தேன்.

என்று ஆரம்பிக்கும் "அழகுத் தெய்வம்" என்ற கவிதை ஏற்பட்ட காரணம் இது தான்.



# மூன்று காதல்

எங்கள் வீட்டில் எவ்வளவு பணம் இருந்தாலும், நிமிஷத்தில் தந்தையார் அதற்குச் செலவு தேடிவிடுவார். ஒரு சமயம் ரூபாய் 200 இருந்தது. அதை ஒரே நாள் செலவழித்தார். "தானம் கொடுப்பார் என்று தெரிந்தால், கேட்பவர்களுக்கா பஞ்சம்?" மறுபடியும் கையில் பணம் இல்லை. மனசுக்குக் கஷ்டம்தான். நான் சற்று வருத்தத்தோடு "அப்பா! இந்தப் பணம் வராமல் இருந்தாலும், நன்ருய் இருந்திருக்கும். வந்து என்ன பிரயோஜனம்? சிறிது நேரம் சந்தோஷம். உடனே வருத்தம். பணமில்லாமல் நாம் எத்தனை நாட்கள் சுகமாய் இருந்திருக்கிரோம். இது வந்து நம்மைச் சஞ்சலத்தில் ஆழ்த்திவிட்டது" என்றேன். தந்தையார் பேசவில்லை. மௌனமாக ஏதோ யோசித்துக்கொண் டிருந்தார். நான், என் தங்கை, தாயார் மூவரும் பேசிக்கொண்டிருந்தோம். பின்பு, பொழுதுபோக்கிற்காக, விக்கிரமாதித்யன் கதை வாசித்துக்கொண்டு இருந்தோம். அதில் வேதாளம் விக்ரமாதித்யனைப் பார்த்துக் கூறுகிறது: "மன்னனின் மூன்று தேவியரும் ஸௌகுசு மிக்கவர்கள். ஆனால், உலக்கைச் சத்தங் கேட்டுக் கை கொப்பளிக்கப் பெற்றவள் ஸௌகுசுக்காரியா? அல்லது சந்திர கிரகணங்கள் தன் மேனியில் பட்டதனுல், உடம்பு கொப்பளிக்கப் பெற்றவள் ஸௌகுசுக்காரியா? அல்லது தலையில் சூடிய புஷ்பத்தில் வண்டு வந்து உட்கார்ந்து தேனருந்தியதனுல் மயக்கமுற்றவள் அதிக மெல்லிய சரீரம் படைத்தவளா?" என்று கேட்டது. அப்பொழுது விக்ரமாதித்யன் உலக்கைச் சத்தங்கேட்டுக் கை கொப்பளித்தவளே அதிக ஸௌகுஸான சரீரம் படைத்தவள் என்று சொன்னுன். மறுபடியும் வேதாளம்

கட்டவிழ்த்துக்கொண்டு முருக்க மரம் ஏறியது என்று வாசித்தேன். தந்தையாரும் நகைப்போடு "உன் கதை முடிந்ததா ? என் பாட்டைக் கேள் " என்றார்.

## சரஸ்வதி

1. பிள்ளைப் பிராயத்திலே—அவள்
பெண்மையைக் கண்டு மயங்கிவிட்டே னங்கு
பள்ளிப் படிப்பினிலே—மதி
பற்றிடவில்லை யெனினுந் தனிப் பட
வெள்ளை மலரணைமேல் —அவள்
வீணையும் கையும் விரிந்த முகமலர்
விள்ளும் பொருளமுதும்—கண்டென்
வெள்ளை மனது பறிகொடுத் தேனம்மா !

2. ஆடி வருகையிலே—அவள்
அங்கொரு வீதிமுனையில் நிற்பாள்; கையில்
ஏடு தரித்திருப்பாள்—அதில்
இங்கிதமாகப் பதம் படிப்பாள்; அதை
நாடி அருகணைந்தால்—பல
ஞானங்கள் சொல்லி யினிமைசெய்வா ளின்று
கூடி மகிழ்வமென்றால்—விழிக்
கோணத்திலே நகை காட்டிச் செல்வாளம்மா!

3. ஆற்றங் கரைதனிலே—தனி
யானதொர் மண்டப மீதினிலே; தென்றல்
காற்றை நுகர்ந்திருந்தேன்—அங்கு
கன்னிக் கவிதை கொணர்ந்து தந்தாள்; அதை

ஏற்றுமன மகிழ்ந்தே—“ அடி!
என்னொ டிணங்கி மணம்புரிவாய் ” என்று
போற்றிய போதினிலே—இளம்
புன்னகை பூத்து மறைந்து விட்டாளம்மா!

4. சித்தந் தளர்ந்த துண்டோ—கலைத்
தேவியின்மீது விருப்பம் வளர்ந் தொரு
பித்துப் பிடித்ததுபோல்—பகற்
பேச்சு மிரவிற் கனவு மவளிடை
வைத்த நிலையையல்லால்—பிற
வாஞ்சை யுண்டோ வயதங் ஙனமே யிரு
பத்திரண் டாமளவும்—வெள்ளைப்
பண்மகள் காதலைப் பற்றிநின்றே னம்மா!

## லக்ஷ்மி

1. இந்த நிலையினிலே—அங்கொர்
இன்பப் பொழிலினி டையினில் வேறொரு
சுந்தரி வந்துநின்றாள்—அவள்
சோதி முகத்தின் அழகினைக் கண்டெந்தன்
சிந்தை திறை கொடுத்தேன்—அவள்
செந்திரு வென்று பெயர் சொல்லினாள்; மற்றும்
அந்தத் தினமுதலா—நெஞ்சம்
ஆரத் தழுவிட வேண்டுகின்றே னம்மா!

2. புன்னகை செய்திடுவாள்—அன்றைப்
போது முழுதும் மகிழ்ந்திருப்பேன்; சற்றென்
முன்னின்று பார்த்திடுவாள்—அந்த
மோகத்திலே தலை சுற்றிடுங்காண்; பின்னர்

என்ன பிழைகள்கண்டோ—அவள்
என்னைப் புறக்கணித் தேகிடுவா ளங்கு
சின்னமும் பின்னமுமாய்—மனஞ்
சிந்தியுள மிக நொந்திடுவே னம்மா!

3. காட்டு வெளியினிலே—மலைக்
காட்சியிலே; புனல் வீழ்ச்சியிலே பல
நாட்டுப் புறங்களிலே—நகர்
நண்ணும் சிலசுடர் மாளிகை தன்னிலும்
வேட்டுவர் சார்பினிலே—சில
வீரரிடத்திலும் வேந்தரிடத்திலும்
மீட்டுமவள் வருவாள்—கண்ட
விந்தையிலே யின்ப மேற்கொண்டு போமம்மா!

## பராசக்தி

1. பின்னொரு ராவினிலே—கரும்
பெண்மை யழகொன்று வந்தது கண்முன்பு
கன்னி வடிவமென்றே—களி
கண்டு சற்றே யருகிற்சென்று பார்க்கையில்
அன்னை வடிவமடா! இவள்
ஆதி பராசக்தி தேவியடா! இவள்
இன்னருள் வேண்டுமடா! பின்னர்
யாவு முலகில் வசப்பட்டுப் போமடா.

2. செல்வங்கள் பொங்கிவரும்—நல்ல
தெள்ளறி வெய்தி நலம்பல சார்ந்திடும்
அல்லும் பகலுமிங்கே—இவை
யத்தனைகோடி பொருளி னுள்ளே நின்று

வில்லை யசைப்பவளை — இந்த
வேலை யனைத்தையுஞ் செய்யும் வினைச்சியைத்
தொல்லை தவிர்ப்பவளை — நித்தம்
தோத்திரம் பாடித் தொழுதிடு வோமடா !

## பாட்டின் கருத்து

இளமையில் பள்ளிக்கூடப் படிப்பு என் மனத்திற் கேற்கவில்லை. ஒரு பெண்—கவிதைக் கன்னி என்முன் தோன்றினாள். அவளது அழகில் மயங்கினேன். அவள் என்னை அலைக் கழித்தது விந்தை ! ஒரு தெருவின் முனையில் நிற்பாள். உடனே மறைவாள். கையில் ஏடு தரித்து, சங்கீதம்பாடி மகிழ்விப்பாள். ஆற்றங்கரையில் தனியிடத்தே அமர்ந்திருக்கும் என்னைக் கண்டதும் கவிதை மலர் எனக்கு அளிப்பாள். நான் அந்த மகிழ்ச்சியி லிருக்கும்போதே மறைந்துவிடுவாள். நான் அவள் செய்யுங் கூத்துக்களுக்கு மனந் தளர்வது கிடையாது. அவள் மீதுள்ள விருப்பம் அதிகரித்தது. எப்போதும் பகலில் பேசும் பேச்சு, இரவில் நித்திரையில் சொப்பனம் எல்லாம் அவள் மயம்தான். இந்த விதமாக எனது பாலியப் பருவம் கடந்தது.

இப்பொழுது இன்னொரு பெண்ணைப் பார்த்தேன். அவள் பெயர் ஸ்ரீதேவி. அவளைச் சுகந்த மலர்ச் சோலையில் பார்த்தேன். அந்த க்ஷணமே அவளை யடைய ஆவலுற்றேன். அவளது ஒரு புன்னகை என்னை ஒரு நாள் முழுதும் ஆனந்தத்தி லாழ்த்தும். சற்று கடைக்கண்ணால்

பார்ப்பாள். அந்த இன்பந் தாங்காமல் தலை சுற்றும். பின்பு எதற்காகவோ என்னை அலட்சியம் செய்வாள். என் மனம் உடைந்து விடும். பின்பு, அவளைக் காட்டு வெளியில்! மலையில்! அருவியில்! வயல்களில்! மாளிகையில்! மன்னரிடத்தில்! மீட்டும் அவளைத் தரிசிப்பேன். கண்டதே பேரின்ப மென்று கருதுவேன்.

ஓர் நாளிரவு பெண்மையே கன்னியுருக் கொண்டு வந்தது. "இதோ இன்னொரு பெண்" என்று களிப்புடன் அருகில் சென்று பார்த்தேன்! தாய் அன்னை! பராசக்தி! என் மனதில் ஆசை யொழிந்து அன்பு ஏற்பட்டது. இவளது அருள் இருந்தால் இவ்வுலகில் எல்லாம் வசப் பட்டுவிடும். செல்வம் தானே பொங்கும். அறிவு தானே விரியும். அகில உலகத்திலுமுள்ள அத்தனை பொருளிலும் உள்ளே நின்று அத்தனை ஜீவராசிகளையும் வஸ்துக்களையும் இயக்கு பவளைத் தோத்திரம் பாடித் தொழுதேன்."

நான் "அப்பா, நீங்களும் பழைய காலத்து மகம்மதிய அரசர்களைப்போல் எத்தனை பெண்களை விவாஹம் செய்ய ஆசைகொண்டீர்கள்" என்றேன். தந்தை "இதுதான் குழந்தைப் புத்தி என்பது. விவாஹம் உண்மையான விவாஹமா? அப்படியில்லை. நான் சிறு வயதில் படிப்பே முக்கியம் என்று கருதினேன். வேறொன்றிலும் புத்தி செல்லாது. பின்பு பணத்தின் மேலாசை யுண்டாயிற்று. அது வருவதுபோல் வந்து ஓடிப்போய்விடும். ஓடிப் போனாலும் அதைப்பற்றிய ஆவல் தீராது. பணத்தை எந்த இடத்தில் கண்டாலும் மகிழ்

வேன். பின்பு அன்னை பராசக்தியின் அருள் எனக்குக் கிடைத்தது. கல்வி, செல்வம் நம்மை வலிய வந்து அடையும் என்று மனம் நிம்மதியுற்றது.—கல்வி, பணம், சக்தி இவைகளை மூன்று பெண்களாகப் பாவித்தேன்'' என்றார். "அப்பா! நான் கேட்டது தப்புத்தான்" என்றேன். "தப்பு இல்லை. உன் அறிவில் தெளிவு ஏற்பட இந்தக் கேள்வி எழுந்தது" என்றார் தந்தை.



# புயற்காற்று

புதுச்சேரியில் நள வருஷம் கார்த்திகை மாசம் 8-ந் தேதி புதன்கிழமை இரவில், அபாரமான புயல்காற்றடித்தது. பெரிய கிழவர்கள் தங்கள் வாழ்நாளிலே அதைப்போன்ற புயலை என்றும் பார்த்ததில்லை என்று கூறுகிறார்கள். சாயங்காலத்தி லிருந்தே காற்றுத் தேவன் ஊத ஆரம்பித்துவிட்டான். எப்படிப்பட்ட காற்று! கூ. கூ. வென்று விண்ணைக் குடைந்திடும் காற்று. கும்மிருட்டு. என் தந்தையார் இரவுகளில் அரவிந்தர் வீடு சென்று வேத ஆராய்ச்சி செய்வார். அங்குதான் இராப் போஜனத்தை யனுப்புவோம். இரவு ஒன்பது மணிக்குமேல்தான் அவ்விருவரும் ஆராய்ச்சியி லீடுபடுவார்கள். பின்பு விடியற்காலை ஐந்து மணிவரைக்கும் அவ்விதமே உட்கார்ந்திருப்பார்கள். இருவருக்கும் களைப்போ, சோர்வோ உண்டாவதில்லை. வழக்கம்போல், அன்றும் மாலை ஆறு மணிக்குத் தந்தையார் புறப்பட்டார்.

**என் தாயார்** :—இன்று போகாவிட்டால் என்ன? மழையும் காற்றுமா யிருக்கிறதே!

**தந்தை** :—ஒன்றுக்கும் அஞ்சாத நீ, இந்த இடிக்கும் மழைக்கும் பயப்படப் போகிறாயா?

**தாயார்** :—இல்லை. என் மனம் ஏதனாலோ இன்று அதைரியமடைகிறது.

**தந்தை** :—ஒரு நல்ல காரியம் செய்யப்போனால் அதற்கு எத்தனை தடை!

இதற்குள், நான், என் தங்கை பாப்பா எல்லோருமாகச் சேர்ந்துகொண்டு அப்பா போவதை நிறுத்திவிட்டோம். தந்தையும் இதைக் கேட்டு மனம் சலனமடைந்தார். சமாதானமின்றி, அப்படியும் இப்படியும் உலாவி

ஞர். சரியாகப் போஜனமும் அருந்தவில்லே. ஒன்பது மணி யிருக்கும். வாயுதேவன் சீறி எழுந்தான், கோபமூட்டப் பெற்ற புலியைப்போல. பிரளயத்தில் ஏற்படும் என்கிருர் களே, அதுபோல் மழையும் வெள்ளமும். தெருக்களில் தண்ணீர் ஒரு ஆள் ஆழம் ஓடுகிறது. புதுவையில் தென்னே மரம் அதிகம். காற்று ஆரம்பித்ததும், சடசட வென்று மரங்கள் சாய்ந்தன. வீடுகள் இடிந்து விழுந்தன. மரங்கள் விழுந்ததால் மின்சாரக் கம்பிகள் அறுந்து, விளக்குகள் எல்லாம் அணேந்து, ஊர் பூராவும் ஒரே அல்லோல கல்லோலம்! நாங்கள் அன்றுதான் வேறு வீட்டிற்குக் குடி வந்திருந்தோம். [அதாவது முன்பிருந்த வீட்டிற்கு எதிர் வீடு.] எங்கள் வீட்டு ாடியிலும் நாலேந்து மரங்கள் சாய்ந்தன. தந்தையார் தாயாரிடம் சொன்ஞர். "பெண் கள் தெய்விகத்தன்மை பொருந்தியவர்கள் என்பதை இன்றுதான் பிரத்யக்ஷமாகக் கண்டேன். அதனுல்தான் நான் இன்று வேத ஆராய்ச்சியைக்கூட நிறுத்தினேன். உன் மனத்தில் 'ஏதோ சம்பவிக்கப் போகிறது' என்று தோன்றிவிட்டது. கஷ்டப்படும்போது எல்லோரும் ஒன்ரு யிருந்து அதை அனுபவிப்பதே நல்லது என்பதற்காகத் தான் நான் போகாமலிருந்தேன்."

**தாயார் :**—காரணம் தெரியாமல் என் மனம் இன்று கலங்கிற்று. ஏதாவது உற்பாதம் ஏற்படாதிருக்க வேண்டு மே என்றுதான் உங்களே வழிமறித்தேன்.

**தந்தை :**—வானம் உறுமுகிறது! உலகம் நடுங்குகிறது! நாம் இப்பொழுது ஏதாவது செய்ய முடியுமா! பராசக்தி யைத் துதித்து, துன்பம் வராமல் காக்கச் சொல்வதைத் தவிர வேறு வழியில்லே.

**தாயார் :**—ஐயோ! நேற்று நாமிருந்த விட்டில் தென்னே மரங்கள் சாய்ந்து மாடியின் ஒரு பாகம் இடிந்து விழு கிறதே! எல்லோரும் அலறும் சத்தமும், அதற்குமேல் வாயுவின் உறுமலும் என்னே திக்பிரமையடையச் செய்

கிறதே! இது என்ன காற்று! இது என்ன இன்று யுக முடிவா! தெரியவில்லையே!

தந்தை :—செல்லம்மா! இவ்வளவு தூரம் மனத்தைக் கலங்கவிடாதே!\ இதோ ருக் வேதம்! படித்துப் பொருளுரைக்கின்றேன். அரவிந்தர் வீட்டில் வாயுவின் ஸ்தோத்திரம்தான் படிப்ப தென்று நினைத்திருந்தேன். இதோ பிரத்யக்ஷமாகவே அவனைத் தரிசித்தேன். ஒரு கெடுதலும் வராது, தேவியின் அருளால்; அவன் சக்தி குமாரன் என்று இப்படிப் பேசிக்கொண் டிருக்கும்போதே, சூறுவளிக் காற்றடித்து, மழைத் தண்ணீர் யானைத் துதிக்கையால் பாய்ச்சுவதுபோல வீட்டுக்குள் வந்து விழுந்தது. காற்று ஜன்னல் கதவுகளை உடைத்து கண்ணாடிகளை யெல்லாம் தூள் தூளாக்கி விளக்கையும் அவித்தது. தாயும், தந்தையும் அந்த மாடியில் சற்று ஒதுப்புறமாய் எங்களை இருக்கச் சொல்லிவிட்டு, ரொம்ப சிரமப்பட்டு விளக்கேற்றி, சுற்றும் சாமான்களை வைத்து மறைத்தார்கள். ஒரு விதமாக விளக்கு அணையாமல் நின்றது.

தந்தை :—செல்லம்மா! ஊழிக் காலத்து முடிவும் இவ் விதம்தான் இருக்கும். உலகம் ஜலப்பிரளயம். ஓடும் நீர் அந் நதித் தண்ணீர். சக்தி காற்ருக மாறிவிடுவள். சிவன் வெறிகொண் டிருப்பான். காற்று நீரைச் சிதறடித்து, ஆகாசத்தில் மின்னை விளைவித்து, நீரை நெருப்பாக்கி, நெருப்பை நீராக்கி, நீரைத் தூளாக்கி, தூளை நீராக்கி, சண்ட சண்டமாருதம் செய்து, இந்த விதமாக யுக முடிவு செய்வான். காற்றே நம்மைக் காப்பான். மேகங்களை ஒன்ருேடொன்று மோதச் செய்து, இடிக்கப்பண்ணி, கடலைக் கலக்கி, மண்ணைப் புரட்டி விளையாடுகிருன்.

"காற்றே! ஒளியே! வலிமையே! உன்னை வணங்குகிறேன். காற்றே! உயிரே! அகில உலகத்திற்கும் உயிரளிக்கும் தேவனே! நீயே உயிர் என்ருல் உன்ஞல் அதை அழிக்க முடியுமா? எனவே உயிர் அழியவில்லை. உன்

ளோடு கலக்கிறது. சிறிய உயிர் அகண்டமான உயிரோடு சேருகிறது. மரணம் இல்லை."

தாயார் இது கேட்டுச் சிறிது தைரியம் பெற்ருர். இப்போது எங்களுக்கு அந்த சம்பவங்களை நினைக்கும்போது மயிர் கூச்சலிடுகிறது. மெய் சிலிர்க்கிறது. பின்னும் மழையும் காற்றும் நிற்கவில்லை. தந்தையார் அந்த அற்புதத்தை, சக்தியின் விளையாட்டைக் கண்டு வியந்து, பின் வரும் பாட்டை பாடிக்கொண்டு குதிக்கலானுர்.

திக்குக்கள் எட்டுஞ் சிதறி—தக்கத்
 தீம்தரிகிட தீம்தரிகிட தீம்தரிகிட தித்தோம்
பக்க மலைகளு டைந்து—வெள்ளம்
 பாயுது பாயுது பாயுது தாம்தரிகிட
தக்கத் ததிங்கிட தித்தோம்—அண்டம்
 சாயுது சாயுது சாயுது பேய்கொண்டு
தக்கை யடிக்குது காற்று—தக்கத்
 தாம்தரிகிட தாம்தரிகிட தாம்தரிகிட தித்தோம்.

வெட்டி யடிக்குது மின்னல்—கடல்
 வீரத்திரை கொண்டு விண்ணை யிடிக்குது
கொட்டி யிடிக்குது மேகம்—கூ
 கூவென்று விண்ணைக் குடையுது காற்று
சட்டச்சட சட்டச்சட சட்டா—என்று
 தாளங்கள் கொட்டிக் கனைக்குது வானம்
எட்டுத் திசையு மிடிய—மழை
 எங்ஙனம் வந்ததடா தம்பி வீரா!

அண்டம் குலுங்குது தம்பி—தலை
 ஆயிரம் தூக்கி யச்சேடனும் பேய்போல்
மிண்டிக் குதித்திடு கின்ருன்—திசை
 வெற்புக் குதிக்குது வானத்துத் தேவர்

செண்டு புடைத்திடு கின்றார்—என்ன
தெய்விகக் காட்சியைக் கண்முன்பு கண்டோம்
கண்டோம் கண்டோம் கண்டோம்—இந்தக்
காலத்தின் கூத்தினைக் கண்முன்பு கண்டோம்.

தத்தரிகிட தத்தரிகிட தித்தோம்.

பின்பு காலை ஆறு மணிக்குப் புயற்காற்று அடங்கிற்று.

## 2. புயற்காற்று

மறு நாட் காலை ஐந்து மணி புயற்காற்றடித்ததனால் போக்கு வரத்துக்கு அசௌகரியமாக, மரங்களும் இடிந்த வீடுகளும் தெருக்களை அடைத்துக்கொண்டு கிடந்தன. தந்தையாரும் காலையுணவுகூடக் கொள்ளாமல் புறப்பட்டார், நண்பர்களையும் அன்பர்களையும் பார்ப்பதற்கு. நானும் உடன் சென்றேன். மரங்கள் சாய்ந்ததால் அவற்றில் வசித்த காக்கைகள், குருவிகள் மற்றும் அனேகவித பட்சிகள் யாவும் கூடுகளுடன் சிதறிக்கிடந்தன. தெருவில் முழங்கால்வரை தண்ணீர். மரங்களையும் மட்டைகளையும், தாண்டித் தாண்டிச் சென்றோம். முதலில் முருகேச பிள்ளை வீட்டை அடைந்தோம். அங்கு விபத்து ஒன்றும் இல்லாதிருப்பதைக் கண்டு சிறிது சமாதானமடைந்து, அங்கிருந்து ஒவ்வொரு நண்பர்களாய்ப் பார்த்துக்கொண்டு, வ. வெ. சு. அய்யர் வீடு சென்றோம். ஐயர் மிகவும் களைப்புற்றிருந்தார். ஏனெனில் இரவு முழுதும் மழைத்தண்ணீர் அவர்கள் வீட்டு உள்ளெலாம் பெருகிவிட்டதாயும், இறைத்துக் கொட்டும் வேலை ஏற்பட்டதாயும் சொன்னார். அங்கிருந்து முத்தியால்பேட்டைவரை சென்றோம். உடனே நண்பர் ஒருவர் ஓடி வந்து "சுப்பரத்னம் சமாசாரம் கேள்விப்பட்டீர்களா?" என்றார். "இல்லையே" என்றார் தந்தை. அவர் சொல்லு முன்பாகவே, சுப்பரத்னம்

[இப்போது பாரதிதாசன் என்னும் பெயரில் இருக்கிருர்.] வந்துவிட்டார். "சுப்பரத்னம்! என்னப்பா நடந்தது?" என்று தந்தை கேட்டார். அவர் பின்வருமாறு கூறினர்: "நான் என் கிராமத்தில் தெருத் திண்ணையில் படுத்துக் கொண்டிருந்தேன். காற்றடிக்க ஆரம்பித்தது. உடனே மழையும் கொட்ட ஆரம்பித்தது. நான் உள்ளே போவதற்காக எழுந்திருந்தேன். பத்துப் பேர் சேர்ந்து என்னைப் பிடித்திழுப்பதுபோல் தோன்றிற்று. அவ்வளவு தான். நான் திமிறிக்கொண்டு கதவைத் திறந்து உள்ளே போவதற்காக எழுந்திருந்தேன். எனக்கு என்ன நடக்கிற தென்றே தெரியாதபடி என்னைப் பந்தைப்போல் தூக்கி வீசிற்று காற்று. ஒரு தடவை வயல்வெளியில் போட்டது. அங்கிருந்து தூக்கி களிமண்ணில் போட்டுப் புரட்டி எடுத்தது. என்னுல் முடிந்தவரை சிரமப்பட்டுக் காற்றில் பறக்கக் கூடா தென்று நினைத்துப் பெரிய மரம் ஒன்றைக் கட்டிக்கொண்டேன். அது முட்டாள்தனம் என்று பின்னுல் தெரிந்தது. க்ஷணத்திற்கெல்லாம் மரம் மடமடமட வென்னும் ஓசையோடு முறிந்து விழுந்தது. இன்ன சத்தம் என்று உரைக்க முடியாதபடி ஒரே இரைச்சல்! வாயு தேவன்தான் அவ்விதம் உறுமினுனே, அல்லது பேய்கள் தான் அவ்விதம் கூக்குரலிட்டனவோ தெரியாது. என் மனதில் இவ்விதம் தீர்மானித்துவிட்டேன்.

"நாம் மறுபடி உலகத்தைப் பார்க்கப் போவதில்லை. மின்னல் கண்ணைப்பறிக்கிறது இடிச்சத்தம் காதைத் தொளைக்கிறது. என் உடம்பில் லங்கோட்டைத் தவிர வேறொன்றுமில்லை குளிர் நடுக்குகிறது. பல் கிட்டுகிறது. பராசக்தியைத் தியானித்துக்கொண்டு கண்ணை மூடிக்கொண்டேன். கண்ணை விழித்தால் பயங்கரமான இருளில் கொட்டு மழையில் காற்று எங்கேனும் மரங்களில் மோதி விடுமோ என்று பயமாயிருக்கிறது. காதையும் கையினுல் பொத்திக்கொண்டேன். ஒவ்வொரு நிமிஷத்திலும்

மரணத்தை எதிர்பார்த்தேன். காற்று என்னைப் புரட்டிக்கொண்டும், உருட்டிக்கொண்டும், தூக்கித் தூக்கி விசி, கடைசியில் ஒரு தண்ணீரில் கொண்டு அமுக்கிற்று. அமுக்கிய அமுக்கலில் மூச்சுத் திணறிவிட்டது. இருந்தாலும் நான் தைரியத்தைக் கைவிடாமல் தம் மூச்சு அடக்கிக்கொண்டு மேலே வருகிறதற்கு முயற்சி செய்தேன். அனேகந் தடவை முயற்சி தோற்றது. கடைசியில் கைகளை வீசியதும் சில கொடிகள் அகப்பட்டன. அதைப்பற்றிக் கொண்டு எப்படியோ திக்குமுக்காடித் தண்ணீரிலிருந்து உயர வந்துவிட்டேன். நல்ல வேளை. அப்போது சிறிது காற்று மட்டுப்பட்டிருந்தது. மெதுவாகக் கரையேறிப் பார்க்கையில் ஊரிலிருந்து நான்கு மைலுக்கப்பால் உள்ள கிராமத்து வயலோரத்தில் இருப்பது தெரிந்தது. அங்கிருந்து ஒரு வண்டியிலேறி இங்கு வந்து சேர்ந்தேன். என் மனத்தில் நாம் இப்படி அவஸ்தைப்பட்டோமே, உங்கள் கதி என்னவாயிற்றோ என்று ரொம்பக் கவலையாயிருந்தது. தங்களைக் கண்டதும் கவலை நீங்கிற்று'' என்று கூறினார். அவர்களை எல்லாம் எங்கள் விட்டில் போயிருக்கும்படி சொல்லிவிட்டு, நானும் அப்பாவும் மட்டும் அரவிந்தர் வீடு சென்றோம். பாபுஜி மிகவும் ஆவலோடு தந்தையை வரவேற்றார். வெகு நேரம் பேசிக்கொண்டிருந்தார்கள். அவர் இருந்த வீடு ஒரு நல்ல கெட்டிக் கட்டிடம். அப்படியிருந்தும் வீட்டுக்குள் தண்ணீர் பெருகி மிகவும் துன்பங் கொடுத்ததாம். எல்லோரும் காரிருளில் தீப்பெட்டி வைத்த இடம் தெரியாமல் திண்டாடினார்கள். பாபுஜி மட்டும் இருந்த இடம் விட்டு அசையாமல் ஜெபம் செய்துகொண்டிருந்தார். பாபுவின் சிஷ்யர்கள் எல்லோரும் பங்களாவின் எல்லா சாமான்களையும் கவனித்து வரும்போது, அவரது தர்மபத்நி ஸ்ரீமதி மிருணாலினி தேவியின் புகைப்படம் ஒன்று மட்டும் உடைந்து சேதமடைந்துவிட்டதென்று அதைக் கொணர்ந்தனர். அது கண்டு அர

விந்தர் மிகவும் வருந்தினர். இரண்டு நாளைக் கெல்லாம் ஸ்ரீமதி மிருணாலினி தேவி விண்ணுலகம் அடைந்ததாக வங்காளத்திலிருந்து செய்தி வந்தது. நாங்கள் வீடு வந்ததும் "அப்பா, நேற்றைய சம்பவத்தைப்பற்றிப் பாட்டு ஒன்றும் எழுதவில்லையே" என்றேன். அவர் எழுதிய பாட்டு இதுதான்:

புருஷன் :— காற்றடிக்குது கடல் குமுறுது
கண்ணை விழிப்பாய் நாயகமே!
தூற்றல் கதவு சாளரமெல்லாம்
தொளைத் தடிக்குது பள்ளியிலே.

மனைவி :— நேற்றிருந்தோ மந்தவீட்டினிலே யிந்த
நேரமிருந் தாலென் படுவோம்;
காற்றென வந்தது கூற்றமிங்கே நம்மைக்
காத்தது தெய்வ வலிமையன்றோ?

புருஷன் :— வானஞ் சினந்தது வைய நடுங்குது
வாழி பராசக்தி காத்திடவே;
தீனக் குழந்தைகள் துன்பப் படாதிங்கு
தேவியருள் செய்ய வேண்டுகின்றோம்.



## பக்தியினாலே

ஒரு நாள் நான் குளிக்காகல் சோம்பேறித்தனமாய் உட்கார்ந்திருந்தேன். என் பாட்டியார். "அம்மா! குழந் தாய் ஸ்நாநம் செய்" என்றார். நான் காது கேட்காதது போல் பேசாதிருந்தேன். பாட்டியார் மறுபடியும் வற்புறுத்தினார்

"குளிக்காவிட்டால் என்ன பாட்டி! எனக்கு உடம்பு சரியில்லை. என்னமோ வேதனையாய் இருக்கிறது" என்றேன். "என்னம்மா இப்படிச் சொல்லுகிறாய்? குளிக்காவிட்டால் உடம்பு சரியாகிவிடுமா? குளித்துத் தேறு கொடுத்துத் தேறு" என்று தெரியாமலா ஔவை யார் சொல்லியிருக்கிறாள் என்றாள் பாட்டி. தந்தையார் அடுத்த உள்ளிலிருந்து கவனித்துக்கொண் டிருந்தார். "ஆம். வாஸதவம், அம்மா சொல்வது உண்மை. மிகவும் உண்மை. சோர்ந்த உடலுக்கு ஸ்நாநம் ஆரோக்யம் அளிக்கும். நைந்த மனத்திற்குத் தானம் ஆறுதலளிக்கும்" என்றார் தந்தை. என் தாயார் "வந்தது வினை; ஏற்கெனவே வாங்கி வைத்த சாமானை வீட்டிலிருக்க விடமாட்டார். நீ வேறு தானத்தின் உயர்வைப்பற்றிப் பேசினால் கேட்க வேண்டுமா?" என்றார். சிறிது நேரத்திற் கெல்லாம் ஒரு பிச்சைக்காரன் வந்து, "சாமி! துணியில்லாமல் கஷ்டப் படுகிறேன். ஒரு கிழிஞ்ச வஸ்திரம் கொடுங்கோ" என்றான். உடனே அவர் அணிந்திருந்த வேஷ்டி, கோட்டு, டர்பன் உள்பட எல்லாவற்றையும் அவன் கையில் கொடுத்துவிட்டார். லங்கோடுடன் உள்ளே வந்தார். தாயார் "என்ன இது என்றார்!" "கொடுத்துத் தேறினேன்" என்றார் தந்தை.

என் தங்கை பாப்பாவுக்கு ரொம்ப ஜுரம்; குழந்தை தன் ஞாபகமின்றிப் புலம்ப ஆரம்பித்துவிட்டாள். அதோடு வயிற்றளைச்சலும்கூட. தலையில் ஐஸ் வைத்து உடம்பை அடிக்கடி துடைத்தும் ஜுரம் விடவில்லை. புதுவையில் பெரிய டாக்டர் ஸ்ரீ அம்பு, எங்கள் நண்பர் சங்கரச் செட்டியார் எப்போதும் அருகிலிருந்து மருந்துகள் கொடுப்பார். பணமோ எப்பொழுதும் தட்டுத்தான். தந்தையாருக்கு ஜுரம் வந்துவிட்டால், இரண்டு கொயினு மாத்திரைகளைப் போட்டுக்கொண்டு பேசாமல் படுத்திருப்பார். மற்றவர்களுக்குத் தொந்தரவு கொடுக்கக் கூடாதென்று வேறு என்ன வந்தாலும் பொறுத்துக்கொள்ளுவார். குழந்தைகளுக்கு உடம்பு சரியில்லாவிட்டால் அவரால் சகிக்க முடியாது. பாப்பா குழந்தை முதலே வெகு திருத்தமாகப் பேசுவாள். அப்பா, "பாப்பா, முருகேசப் பிள்ளை வந்திருக்கிறார்" என்றார். அவளுக்கு நாக்குக் குழறி விட்டது, "யாழு? முழுகேழ பிள்ளையா?" என்று குழறினாள்.

உடனே கண்களிலிருந்து தாரை தாரையாகக் கண்ணீர் பெருகவும், குழந்தை இதைப் பார்க்கலாகா தென்று சக்தியின் படம் வைத்திருக்கும் அறையில் சென்று, சாஷ்டாங்கமாக நமஸ்கரித்துத் தோத்தரிக்கலானார்.

காளீ வலிய சாமுண்டி ! ஓங்
காரத் தலைவி யென்னிராணி ! - பல
நாளிங்கெனை யலைக்கலாமோ ?—உள்ளம்
நாடும் பொருளடைதற் கன்றோ ?—மலர்த்
தாளில் விழுந்தபயம் கேட்டேன்; அது
தாராயெனி லுயிரைத் தீராய்—துன்பம்
நீளிலுயிர் தரிக்க மாட்டேன்; கரு
நீலி ! என்னியல் பறியாயோ.

(ஓம் காளீ வலிய சாமுண்டி !)

என்று பலவாறாக முறையிட்டார். எப்போதும் எங்கள்

வீட்டில் யாராவது சிஷ்ய கோஷ்டியினர் இருந்துகொண்டிருப்பார்கள். அன்று சோதனைபோல ஒருவரும் இல்லை. தாயார் வருத்தத்தோடு, "டாக்டரை அழைத்து வாருங்கள்" என்றார். தந்தை சோகத்தோடு, "செல்லம்மா! என்ன, நீயும் இப்படிப் பேசுகிறாய், ஒன்றுந் தெரியாதவரைப்போல். பிரார்த்தனையினால் ஆகாத பயன் டாக்டரினால் ஏற்படப்போகிறதா?" என்றார். உடனே சக்தியின் அருள் வன்மையால் எங்கள் நண்பர் டாக்டர் அம்புவைக் கூட்டிக்கொண்டு வந்தார். தந்தை, "செல்லம்மா! பார்த்தாயா பார்த்தாயா, பக்தியின் பயனை!" என்று கூறிவிட்டு, "டாக்டர்! குழந்தையைப் பாருங்கள்" என்றார். டாக்டர் இன்ஜெக்ஷன் செய்து மருந்து கொடுத்தார். குழந்தையும் தெளிவாகப் பேசினாள். தந்தையின் மகிழ்ச்சிக்கு அளவில்லை.

பிலஹரி ராகத்தில், "பக்தியினாலே இந்தப் பாரினிலெய்திடு மேன்மைகள் கேளடி" என்ற பாட்டை ஆசுகவியாகப் பாடினார். டாக்டருக்குப் 'பீஸ்' பணம் கொடுப்பதற்காக எழுந்தார் தந்தை. டாக்டர் அம்பு, "பாரதியாரே! பீஸ் ஒன்றும் வேண்டாம்; பாட்டை முழுதும் பாடினால் அதுவே போதும்" என்றார். தந்தை பாடலானார்:

பக்தியினாலே—இந்தப்
 பாரினி லெய்திடும் மேன்மைகள் கேளடி!
சித்தந் தெளியும்—இங்கு
 செய்கை யனைத்திலும் செம்மை பிறந்திடும்
வித்தைகள் சேரும்—நல்ல
 வீர ருறவு கிடைக்கு மனத்திடைத்
தத்துவ முண்டாம்—நெஞ்சில்
 சஞ்சல நீங்கி யுறுதி விளங்கிடும். (பக்தி)

காமப் பிசாசைக்—குதிக்
 காலிட் டடித்து விழுத்திட லாகுமித்

நாமதப் பேயைக்—கண்டு
  நாக்கி மடித்திட லாகுமெந் நேரமும்
தீமையை எண்ணி—அஞ்சு ந்
  தேம்பற் பிசாசைத் திருகியெறிந்து பொய்ந்
நாம மில்லாதே—உண்மை
  நாமத்தி னாலிங்கு நன்மை விளைந்திடும். (பக்தி)

ஆசையைக் கொல்வோம்—புலை
  அச்சத்தைக் கொன்று பொசுக்கிடுவோம்; கெட்ட
பாச மறுப்போம்—இங்கு
  பார்வதி சக்தி விளங்குதல் கண்டதை
மோசம் செய்யாதே—உண்மை
  முற்றிலுங் கண்டு வணங்கி, வணங்கியோர்
ஈசனைப் போற்றி—இன்பம்
  யாவையு முண்டு புகழ்கொண்டு வாழ்குவம்.(பக்தி)

சோர்வுகள் போகும்—பொய்ச்
  சுகத்தினைத் தள்ளி சுகம்பெற லாகுநற்
பார்வைகள் தோன்றும்—மிடிப்
  பாம்பு கடித்த விஷமகன் றே நல்ல
சேர்வைகள் சேரும்—பல
  செல்வங்கள் வந்து மகிழ்ச்சி விளைந்திடும்
'தீர்வைகள்'' தீரும்—பிணி
  தீரும் பலபல இன்பங்கள் சேர்ந்திடும். (பக்தி)

கல்வி வளரும்—பல
  காரியங் கையுறும் வீரிய மோங்கிடும்
அல்ல லொழியும்—நல்ல
  ஆண்மை யுண்டாகும் அறிவு தெளிந்திடும்
சொல்லுவ தெல்லாம்—மறைச்
  சொல்லினைப் போல பயனுள தாகுமெய்
வல்லமை தோன்றும்—தெய்வ
  வாழ்க்கை யுற்றேயிங்கு வாழ்ந்திடலா முண்மை.

சோம்ப லழியும்—உடல்
சொன்ன படிக்கு நடக்கு முடிசற்றும்
கூம்புத லின்றி—நல்ல
கோபுரம் போல நிமிர்ந்த நிலைபெறும்
வீம்புகள் போகும்—நல்ல
மேன்மையுண்டாகிப் புயங்கள் பருக்கும்; பொய்ப்
பாம்பு மடியும்—மெய்ப்
பரம்வென்று நல்ல நெறிக ளுண் டாய்விடும்.(பக்தி)

சந்ததி வாழும்—வெறுந்
சஞ்சலங் கெட்டு வலிமைகள் சேர்ந்திடும்
இந்தப் புவிக்கே—இங்கோர்
ஈசனுண் டாயி லறிக்கையிட் டேனுன்றன்
கந்த மலர்த்தாள்—துணை
காதல் மகவு வளர்ந்திட வேண்டுமென்
சிந்தை யறிந்தே—அருள்
செய்திட வேண்டுமென் றாலது செய்திடும். (பக்தி)



# பாரதியும் கவிதையும்

என் தந்தை பாரதியார், புதுவையில், காலத்தின் கோலத்தினுல் பட்ட துன்பங்கள் அளவிறந்தன. " பட்டன தொல்லே பலபெரும் பாரதம். " எப்பொழுதும் பிரமத்திலேயே லயித்து, பரமாத்மாவோடு ஒன்றுசேர வேண்டுமென்ற அவா, தந்தையாருக்கு மிகுதியாக வுண்டு. அதற்குச் சமயமும் சந்தர்ப்பமும் சரிவர அமையாமல், ஏதேனும் தடங்கல் ஏற்பட்டுக்கொண்டே யிருக்கும். கவிதையில் ஆழ்ந்து, கலே வளர்ச்சியிலே ஈடுபடுவதற்குத் துடிதுடிப்பார். ஆனுல், கொடிய வறுமை அவரை ஒன்றையும் செய்யமுடியாமல் தடுத்தது. வறுமை மட்டுமல்ல. நாட்டுப் பணி செய்வதனுலேற்பட்ட விக்கினங்களும் இதற்குக் காரணமா யிருந்தன. அதை நினைத்து நினைத்து உருகுவார். " இலக்கிய வளர்ச்சிக்குக் கவிதை யென்னும் அமுதத்தை அள்ளிப் பருகும்போது, விழுங்கும் சமயத்தில் தொண்டையில் முள் தைத்துவிட்டதே!" என்ருர். " உடம்பு சரியா யில்லையா அப்பா?" என்றேன். " இல்லையம்மா, மனம் தான் சரியில்லை." " ஏன்?" " பன்றி வாழ்வு வாழ்கிறேன்; நரகத்துழலுகிறேன்" என்று பதில் வந்தது. பிரமித்துப்போனேன் நான். " என்ன கஷ்டம் புதிதா யேற்பட்டுவிட்டதோ தெரியவில்லையே? இல்லாவிட்டால், 'நான் அமரன்'; 'நான் தேவன்'; 'நான் சிவன்' என்று கூறுபவர் இப்படிச் சொல்லவேண்டுமானுல்!"—" என்ன விபத்து ஏற்பட்டுவிட்டதப்பா?" என்றேன். என் பதைபதைப்பையும் துடிப்பையும் கண்ட தந்தை, " அப்படியொன்றும் வந்துவிடவில்லை, பயப்படாதே. நான் கவிதை வெள்ளத்தில் மிதக்க எண்ணினேன். நம் மக்களின் வாழ்க்கையின் கேவலம் வேறு சகிக்க முடியவில்லை. நான்

"இவ்வளவுதானா? இது எப்போதும் உள்ள விஷயந்தானே." "நினைக்குந்தோறும், ஒவ்வொரு கணமும் நம் நாட்டு நிலை என்னைக் கலங்கச் செய்கிறது" என்றார். "ஆமாம், அதற்கும், நீங்கள் 'பன்றி வாழ்வு வாழ்கிறேன்' என்று கூறியதற்கும் என்ன சம்பந்தம்?" என்றேன். "அதா, பெரிய கதையல்லவா?" என்றார். "அந்தக் கதையைச் சொல்லுங்கள்" என்று துரிதப்படுத்தினேன். கீழே எழுதிய பாட்டைப் படித்துக் காண்பித்தார் :

வாராய் கவிதையாம் மணிப்பெயர்க் காதலி!
பன்னாள் பன்மதி யாண்டு கழிந்தன.
நின்னருள் வதன நானேருறக் கண்டே.
அந்தநாள் நீயெனை யடிமையாக் கொள, யாம்
மானிடர் குழாத்தின் மறைவுறத் தனியிருந்
தெண்ணிலா வின்பத் திருங்கடற் றிளைத்தோம்.
கலந்துயாம் பொழிலிடைக் களித்தவன் னாட்களில்
பூம்பொழில் குயில்களி னின்குரல் போன்ற
தீங்குர லுடைத்தோர் புள்ளினைத் தேர்ந்திலேன்;
மலரினத் துன்றன் வாள்விழி யொப்ப
நிலவிய தொன்றினை நேர்ந்திலேன்; தளிர்புனற்
சுனைகளி லுன்மணிச் சொற்கள்போற் றண்ணிய
நீருடைத் தறிகிலேன்; நின்னொடு தமியனாய்
நீயே யுயிரெனத் தெய்வமு நீயென
நின்னையே பேணி நெடுநாள் போக்கினேன்;
வானகத் தமுத மடுத்திடும் போழ்து
மற்றத னிடையோர் வஞ்சகக் கொடு "முள்"
வீழ்ந்திடைத் தொண்டையில் வேதனை செய்தென
நின்னொடு களித்து நினைவிழந் திருந்த
எனைத்துயர்ப் படுத்தவந் தெய்திய துலகிற்
கொடியன யாவினுங் கொடியதா மிடிமை.
அடிநா முள்ளினை அயல்சிறி தேகிக்
களைந்துபின் வந்து காண்பொழுது, ஐயகோ!
மறைந்தது தெய்வ மருந்துடைப் பொற்குடம்

மிடிமை நோய் தீர்ப்பான் விணர்நம் முலகப்
புன்தொழில் ஒன்று போற்றுது மென்பான்.
தென்திசைக் கண்ணொரு சிற்றூர்க் கிறைவரும்
திருந்திய வொருவனைத் துணையெனப் புகுந்தவன்
பணிசெய விரைந்தேன்; பாதகி! நீயென்னைப்
பிரிந்துமற் றகன்றனை பேசொணு நின்னருள்
இன்பமத் தனையும் இழந்துநா னுழன்றேன்.
சின்னுள் கழிந்தபின்—யாதெனச் செப்புகேன்!
நின்னொடு வாழ்ந்த நினைப்புமே தேய்ந்தது
கதையிலோர் முனிவன் கடியதாஞ் சாப
வினைவிறற் பன்றியா வீழ்ந்திடு முன்னர்த்
தன்மக னிடை "என் றயனை நீ யான்புலைப்
பன்றியாம் போது பார்த்துநில் லாதே;
விரைவிலோர் வாள்கொடு வெறுப்புடை யவ்வுடல்
துணித்தெனைக் கொன்று தொலைத்தலுன் கடனும்.
பாவமிங் கில்லை. யென் பணிப்பிது தாதலின்!"
தாதைசொற் கிளர் தன் தளர்வொடு மிணங்கினன்.
முனிவனும் பன்றியா முடிந்தபின், மைந்தன்
முன்னவன் கூறிய மொழியினை நினைந்தும்
இரும்புகழ் முனிவனுக் கிழியதா மிவ்வுடல்
அமைந்தது கண்டுநெஞ் சழன்றிடல் கொண்டும்,
வாள்கொடு பன்றியை மாய்த்திட லுற்றனன்.
ஆயிடை, மற்றிவ் வருந்தவப் பன்றி
யினையது கூறும் " ஏடா ! நிற்க !
நிற்க ! நிற்க ! முன்னர்யாம் நினைந்தவா
றத்துணைத் துன்புடைத் தன்றிவ் வாழ்க்கை.
காற்றும் புனலும் கடிப்புற் கிழங்கும்
இனையபல் லின்ப மிதன்கணே யுளவாம் !
ஆறேழ் திங்கள் அகன்றபின் வருதியேல்
பின்னெனைக் கோறலாம். " பீழையோ டிவ்வுரை
செவியுறீஇ முடிசாய்த் திளையவன் சென்றனன்.
திங்கள்பல போயபின் முனிமகன் சென்று
தாதைப் பன்றியோர் தலத்திடைப் பெடையொடும்

போத்தினம் பலவொடு மன்பினிற் பொருந்தி
யாடல்கண் டயிர்த்தனன். ஆற்ருெ ணு தருகுசென்று,
" எந்தாய் ! எந்தாய் ! யாதரோ மற்றிது !
வேதநூ லறிந்த மேதகு முனிவரர்
போற்றிட வாழ்ந்தநின் புகழ்க்கிது சாலுமோ ?"
எனப்பல கூறி யிரங்கினன்; பின்னர்
வாள்கொடு பன்றியை மாய்த்திடல் விழைந்தான்
ஆயிடை முனிவ னகம்பதைத் துரைக்கும்.
" செல்லடா ! செல்க தீக்குணத் திறிலூ !
எனக்கிவ் வாழ்க்கை யின்புடைத் தேயாம்;
நினக்கிதிற் றுன்ப நிகழுமேற் சென்றவ்
வானினின் நெஞ்சை வகுத்துநீ மடிக "
என்றிது கூறி இருந்தவப் பன்றிநன்
இலைத்தொடு மோடி இன்னுயிர் காத்தது.
இன்னது கண்ட இளையவன் கருதும் :
" ஆவா ! மானிடர் அருமையின் வீழ்ந்து
புன்னிலை யெய்திய போழ்ததி நெடுங்காற்
றெருமரு கின்றிலர். சிலபகல் கழிந்தபின்
புதியநா நீசப் பொய்ம்மைகொள் வாழ்வில்
விருப்புடை யவராய் வேறுநா மென்றும்
அறிந்தில ரேபோன் றதில்களிக் கின்றூர்
என்சொல்கேன் மாயையி னெண்ணரும் வஞ்சம். "
திமிங்கில வுடலும் சிறிய ......
ஓரேழ் பெண்டிரு முடையதோர்
நன்பணிக் கிசைந்தென் தருக்கெலா மழிந்து
வாழ்ந்தனன் கதையின் முனிபோல் வாழ்க்கை !

# சோதனை

ஒரு நாள் கையில் பணம் கிடையாது. பணம் இல்லா மல் என்ன காரியந்தான் நடக்கும்? ஸ்ரீதேவியின் அருள் சுரக்காவிட்டால் தொட்ட முயற்சி, நினைக்கும் எண்ணங் கள் யாவும் மடிந்துவிடும். தந்தையார் அபாரமான திட சித்தம் படைத்தவரானாலும், அடுத்தடுத்து ஏற்படும் தோல்விகளுக்கு [நினைக்கும் எண்ணங்கள் பலவிதமான காரணங்களினால் உருப்படாமல் சிதறியோடி அதனால் ஏற் படும் ஏமாற்றம்.] அவர் மனம் 'தூண்டில் புழு'வெனத் துடித்துக்கொண் டிருந்தது. அவர் அகத்தின் கருத்தை முகம் தெரிவித்தது.

நான் :—அப்பா! 'தெய்வம் அன்பு வடிவானது' என்று புகழுகிறார்களே! பக்தனை மென்மேலும் சோதித்து, அவனை மனம் மடியச்செய்து, துன்ப நிகழ்ச்சியினால் அவன் விரைவில் மரணமடையும்படிச் செய்கிறதே இந்தத் தெய் வம். இந்தத் தெய்வத்தைத் தாய் என்று புகழுகிறார்களே! தாய்க்குத் தன் மக்களை மென்மேலும் துன்புறுத்தி வேடிக்கை பார்க்க மனம் வருமா?

தந்தை :—தங்கம்மா! உன் மனம் குழந்தை நிலையில் இருப்பதனால் தாயுள்ளம் இன்னவிதமா யிருக்கும் என்று உனக்குத் தெரியாது. இதற்குக் கூடிய சீக்கிரம் உதார ணம் காட்டுகிறேன்.

நாலைந்து நாள் கழிந்ததும் என் தந்தைக்கு உடம்பு சரியில்லாமல் போயிற்று. ஜுரம். தாயார் இரவில் விழித்துக்கொண்டே யிருப்பார். குழந்தை விழித்துக் கொண் டிருந்தால், "ஐயோ, குழந்தைக்குத் தூக்கமே வர வில்லையே" என்று கவலைப்படுவார். பாப்பா, சற்று அயர்ந்து தூங்கினாலோ உடனே எழுப்புவார். பாப்

பாவோ, "எழுப்பித் தொந்திரவு பண்ணாதே" என்பாள் தந்தையார் என்னிடம் கூறினார்: "பாப்பாவின் மேலுள்ள அபாரமான அன்பினால் குழந்தைக்குச் சீக்கிரம் குணமாக வேண்டுமே என்ற ஆவலினால், குழந்தைக்குத் தொந்திரவு ஏற்படும் என்பது தெரிந்தும், அடிக்கடி எழுப்பிக் கஞ்சி கொடுத்தும் மருந்து கொடுத்தும் வருகிறாள் உன் தாய். இது கொடிய செய்கை என்று யாராவது சொல்வார்களா? இதேபோல் பராசக்தியும் தன் குழந்தைகள் நல்ல புத்தியுடன் இருப்பதற்காகத் துன்புறுத்தியும், அவமானப்படுத்தியும் சமயத்திற்குத் தகுந்தவிதமாகச் சோதிக்கிறாள். நாம் இதற்கெல்லாம் மனந் தளரலாகாது. பராசக்தி ஜகன்மாதாவாகிய ஸ்ரீதேவியைத் தொழுவதால் வறுமைப் பிணியும், அதைச் சார்ந்த தொந்தரவுகளும் அகன்றுவிடும்" என்று கூறிவிட்டு,

மாதவன் சக்தியினைச்—செய்ய
மலர்வளர் மணியினை வாழ்த்திடுவோம்
போதுமிவ் வறுமையெலாம்—எந்தப்
போதினுஞ் சிறுமையின் புகைதனிலே
வேதனைப் படுமனமும்—உயர்
வேதமும் வெறுப்புறச் சோர்மதியும்
வாதனை பொறுக்கவில்லை—அன்னை
மாமக ளடியினைச் சரண்புகுவோம்

கீழ்களி னவமதிப்பும்—தொழில்
கெட்டவ ரிணக்கமுங் கிணற்றினுள்ளே
மூழ்கிய விளக்கினைப்போல்—செய்யு
முயற்சியெல் லாங்கெட்டு முடிவதுவும்
ஏழ்கட லோடியுமோர்—பயன்
எய்திட வழியின்றி யிருப்பதுவும்
வீழ்கவிக் கொடுநோய்தான்—வைய
மீதினில் வறுமையோர் கொடுமையன்றோ?

பாற்கட லிடைப்பிறந்தாள்—அது
 பயந்தநல் லமுதத்தின் பான்மைகொண்டாள்
ஏற்குமோர் தாமரைப்பூ—அதில்
 இணைமலர்த் திருவடி இசைந்திருப்பாள்
நாற்கரந் தானுடையாள்—அந்த
 நான்கினும் பலவகைத் திருவுடையாள்
வேற்கரு விழியுடையாள்—செய்ய
 மேனியள் பசுமையை விரும்பிடுவாள்.

பொன்னிலு மணிகளிலும்—நறும்
 பூவிலும் சாந்திலும் விளக்கினிலும்
கன்னியர் நகைப்பினிலும்—ஒளிக்
 காட்டிலும் பொழிலிலும் கழனியிலும்
முன்னிய துணிவினிலும்—மன்னர்
 முகத்திலும் வாழ்ந்திடுந் திருமகளைப்
பன்னிநற் புகழ்பாடி—அவள்
 பதமலர் வாழ்த்திநற் பதம்பெறுவோம்.

என்று வணங்கினார். இந்தப் பாட்டில் இன்னும் இரண்டு அடிகள் உண்டு.



# எனக்குக் கொடு

ஒரு நாள் எங்கள் வீட்டில் பெரிய போராட்டம் நிகழ்ந்தது. அப்பாவின் நண்பர்கள் யாவரும் வந்து சேர்ந்தார்கள். அப்பா சாப்பிட்டுக்கொண் டிருந்தார்.

ராமராயர் :—ஸ்வாமி இப்படிச் சாம்பார் சாதமும் பொரித்த அப்பளமும் தேங்காய்ச் சட்னியும் நெய்யும் தயிருமாக விட்டுச் சாப்பிட்டுக்கொண் டிருந்தால் நாடு முன்னேறுவது எப்படி ஐயா? நல்ல காவியங்கள் எழுத வேண்டும் ; மனிதசாதி பிறவிப் பயனை அடைய வேண்டும் ; துக்கத்தி லாழ்ந்திருக்கும் தமிழன் விழிப்பெய்த வேண்டும். இதற்குத் தகுந்தபடி கவிபாட வேண்டும்.

ஸ்ரீ ஆச்சாரியார் :—ரவீந்திரநாத டாகூரின் சிறு கதைகளைத் தமிழில் மொழிபெயர்க்க வேண்டும். தங்களால்தான் அது முடியும்.

பிரமராயர் :—பாரதி! சங்கீதம்தான் சிறப்புடையது. அதற்குச் சமானமாக வேறு ஒன்றுமே கிடையாது. 'கானமுதம்' என்று நீர் புகழ்ந்த சங்கீதத்தைச் சிறப்பித்து ஒரு கவி எழுத வேண்டும்.

"இயற்கை வர்ணனைதான் இனிது. அதன்மூலம் தான் கவிதை நன்கு சோபிக்கும்" என்றார் வல்லூறு நாயக்கர்.

அப்பொழுது மழைக் காற்றடித்தது ; இடியும் மின்னலும் குமுறிக்கொண்டு வந்தது. உடனே அப்பா, அவர்கள் எல்லோரையும் பார்த்து, "அன்பர்களே! உங்கள் எல்லோரையும் திருப்தி செய்யும்படி ஒரு பாட்டு எழுதுகிறேன்" என்று இயற்றலானார். ஆனால், அன்னை பராசக்தியும் நண்பர்களோடு போட்டி போட்டாள். பாரதி

யார் உள்ளத்தில் நின்று, "மகனே! உன் கவிதையை எனக்குக் கொடு" என்றாள். தந்தை பாட ஆரம்பித்தார்.

## பராசக்தி

கதைகள் சொல்லிக் கவிதை எழுதென்பார்;
காவி யம்பல நீண்டன கட்டென்பார்;
விதவி தப்படு மக்களின் சித்திரம்
மேவு நாடகச் செய்யுளை மேவென்பார்;
இதய மோவெனில் காலையு மாலையும்
எந்த நேரமும் வாணியைக் கூவுங்கால்
எதையும் வேண்டில னன்னை பராசக்தி
இன்ப மொன்றினைப் பாடுத லன்றியே.

நாட்டு மக்கள் பிணியும் வறுமையும்
நையப் பாடென் றொருதெய்வங் கூறுமே;
கூட்டி மானுடச் சாதியை யொன்றெனக்
கொண்டு வைய முழுதும் பயனுறப்
பாட்டி லேயறங் காட்டெனு மோர்தெய்வம்;
பண்ணி லின்பமும் கற்பனை விந்தையும்
ஊட்டி எங்கும் உவகை பெருகிட
ஓங்கு மின்கவி யோதெனும் வேறொன்றே.

நாட்டு மக்கள் நலமுற்று வாழவும்;
நானி லத்தவர் மேனிலை எய்தவும்;
பாட்டி லேதனி யின்பத்தை நாட்டவும்;
பண்ணிலே களி கூட்டவும் வேண்டி நான்
மூட்டு மன்புக் கனலொடு வாணியை
முன்னு கின்ற பொழுதி லெலாங்குரல்
காட்டி யன்னை பராசக்தி யேழையேன்
"கவிதை யாவுந் தனக்" கெனக் கேட்கிறாள்.

மழை பொழிந்திடும் வண்ணத்தைக் கண்டுநான்
வானி ருண்டு கரும்புயல் கூடியே
இழையும் மின்னல் சரேலென்று பாயவும்
ஈரவாடை யிரைந் தொலி செய்யவும்
உழை எலாம்இடை யின்றியிவ் வானநீர்
ஊற்றுஞ் செய்தி யுரைத்திட வேண்டுங்கால்
"மழையுங் காற்றும் பராசக்தி செய்கைகாண்!
வாழ்க தாய்" என்று போற்று மென் வாணியே.

சொல்லி னுக்கெளி தாகவு நின்றிடாள்;
சொல்லை வேறிடஞ் செல்ல வழிவிடாள்;
அல்லி னுக்குட் பெருஞ்சுடர் காண்பவர்
அன்னை சக்தியின் மேனி நலங்கண்டார்
கல்லி னுக்குள் அறிவொளி காணுங்கால்,
கால வெள்ளத்தி லேநிலை காணுங்கால்,
புல்லி னின்வயி ரப்படை தோன்றுங்கால்,
பூத லத்திற் பராசக்தி தோன்றுமே.

இந்தப் பாட்டைக் கேட்டு எல்லாரும் ஆச்சரியக் கடலில் முழுகினார்கள்.

தந்தையார் :—நண்பர்களே! நான் எவ்வளவோ முயன்று உங்கள் ஒவ்வொருவரையும் திருப்திசெய்ய எண்ணினேன். ஆனால், என் தாய், என் கவிதையைத் தனக்கென்று கேட்கிறாள். நான் என்ன செய்வது?

ராமராயர் :—அதனால் என்ன? இதைப் போன்ற உயர்ந்த கவிதையைத்தான் நான் விரும்பினேன். என் ஆசை வீணாகவில்லை.

பிரமராயர் :—உங்கள் வாக்கிலிருந்து வாணி கவிமலர்களை வர்ஷிக்கும்போது, அதிலிருந்து இசைத் தேன் துளி இடையே சிந்துகிறது. அதைச் செவியினால் பருகி ஆனந்தமடைந்தேன். சங்கீதம் என்று தேடவேண்டுமா? உமது கவிதையில் சங்கீதம் கலந்துதானே யிருக்கிறது!

நாயக்கர் :—உங்கள் பாட்டை சக்தி தனக்கென்று கேட்டாலுங்கூட, இயற்கையில் அவளைக் கண்ட இன்பத்தை நீர் கூறுவதால் 'இயற்கை' வர்ணனை தானாகவே அமைந்துவிடுகிறது.

தந்தையார் மிக மகிழ்ந்து, " நண்பர்களே ! நானே பாக்கியசாலி. இத்தனை பேரையும் திருப்திபண்ணும்பாட்டு எப்படி இயற்றுவது என்று கவலைகொண் டிருந்தேன். நீங்கள் யாவரும் பரந்த நோக்கங்கொண்டவர்கள். அதனால் என் பாட்டில் தங்கள் தங்கள் நோக்கம் நிறைவேறிவிட்டதென்று திருப்தியடைய முடிகிறது. பராசக்தி தாயல்லவா? அவளுக்குக் கொடுத்த பொருளை, அவள் தன் குழந்தைகள் யாவருக்கும் பங்கிட்டுக் கொடுத்தல் இயல்பேயல்லவா ?" என்றார். நண்பர்கள் யாவரும், " வாழ்க தாய் " என்று வணங்குகிறார்கள்.



# பத்தர்பிள்ளைக்குப் பிடித்த பேய்!

புதுவையில் தந்தையாருக்கு நண்பர்கள் அநேகர் உண்டு. அதில், பிராமணரல்லாதார்தான் அதிகம். சுப்பையாப் பத்தர் என்பவர் தந்தையாரிடம் தேவதா விசுவாசம் வைத்திருப்பார். விதிவசமாக அந்தப் பத்தரின் மகனுக்கு நோய்கண்டது. நோய் என்றால் ஜ்வரம், வயிற்று வலி ஒன்றுமில்லை; மூளைக் கோளாறும் ஒன்றுமில்லை. பேய் பிடித்திருந்தது. அவனைப் பார்த்தவர் யாவரும் அப்படித்தான் கூறினார்கள். பத்தர் அதிக வியாகூலமடைந்தார். தெரிந்த மந்திர தந்திரங்கள் எல்லாம் செய்துபார்த்தார்; வைத்தியத்திற்கும் ஏராளமாகப் பணத்தை வாரிச் செலவிட்டார். ஒன்றுக்கும் நோய் குணமாகவில்லை. என் செய்வது என்று தெரியாமல் தந்தையாரிடம் வந்து யோசனை கேட்டார். "பத்தரே! பையனை உள்ளே அடைத்து வைக்காதீர். காலை மாலையில் சமுத்திரக் கரைக்கோ, தோட்டங்களுக்கோ அழைத்துச் செல்லவேண்டும். பையன் மனது சந்தோஷிக்கும் வண்ணம் நாம் நடக்க வேண்டும். நீர் மந்திரவாதிகளைக் கொண்டு அவனை அடித்து மிரட்டி மிக அதிகமாக அவனைத் தொந்தரவு செய்துவிட்டீர்......" பத்தர் இடைமறித்து, "சுவாமி! நான் சொல்லுவதற்கெல்லாம் அவன் மாறு செய்கிறான். என் வீட்டில் யாரிடமும் அவனுக்குப் பயம் கிடையாது. அவனைக் காலை மாலை அழைத்து வருகிறேன். தாங்கள் தான் அவனை ஸ்வத்தப்படுத்த வேண்டும்." "பத்தரே! அப்படியே செய்யும். இங்கு வருவதனால் ஏதாவது பிரயோஜனமுண்டாகிறதா என்று பார்க்கலாம்" என்றார் தந்தை. பத்தர் சந்தோஷத்தோடு, "நாளைக் கூட்டிவரேன் சாமி!" என்று கூறிச் சென்றார். விடிந்தது. ஏழு மணிக்

கெல்லாம், பேய்பிடித்த மகன் சகிதம் வந்துவிட்டார் பத்தர். தந்தையார் தம் இஷ்ட தெய்வமாகிய பராசக்தியைத் துதித்து வணங்கித் தமது கையினுல் சக்தியின் பிரசாதமாகிய குங்குமமும் திருநீறும் இட்டார். இவ்விதம் மூன்று நாள் காலை மாலை எங்கள் வீட்டுக்கு வந்து போனதினுல் பையனது ஆர்ப்பாட்டம் சற்று அடங்கிற்றென்ருலும் நல்ல தெளிவேற்படவில்லை. பத்தர், அப்பாவிடம் அழமாட்டாக் குறையாக, "சாமி! இப்படியெல்லாம் பாடிக்கொண் டிருந்தால் பேய் போகாது, சாமி! போ, போ, போ என்று துரத்த வேண்டும். அதனுல்தான் போகும்" என்ருர். "பேய் என்று ஓர் உருவம் உமது மகன்மேல் ஏறி உட்கார்ந்திருக்கிறது என்று நினைக்கிறீரா?" "ஆமாம் சாமி, பேயில்லாவிட்டால் பின்னை என்ன?"

தந்தையார் :—அடேயப்பா! வழக்கத்தில் ஜனங்களுக்கு என்ன நம்பிக்கை பார்த்தாயா? எனது தியானத்திற்கு - பிரார்த்தனைக்குப் - போகாத பேய், ஓட்டினுல் போமா? பத்தரே! உமது இஷ்டப்படியே செய்கிறேன். எப்படி ஓட்ட வேண்டும்? மந்திரம் சொல்லியா?

"நீங்கள் என்ன சொல்லியாலும் ஓட்டுங்க, போய் விடும்."

தந்தை :—உமது திருப்திப்படியே ஓட்டுகிறேன்.

வலிமையற்ற தோளினுய் போ, போ, போ!
　　மார்பிலே யொடுங்கினுய் போ, போ, போ!
பொலிவிலா முகத்தினுய் போ, போ, போ!
　　பொறியிழந்த விழியினுய் போ, போ, போ!
ஒலியிழந்த குரலினுய் போ, போ, போ!
　　ஒளியிழந்த மேனியாய் போ, போ, போ!
கிலிபிடித்த நெஞ்சினுய் போ, போ, போ!
　　கீழ்மைஎன்றும் வேண்டுவாய் போ, போ, போ!

இன்று பாரதத்திடை நாய்போல
    ஏற்றமின்றி வாழுவாய் போ, போ, போ!
நன்று கூறி லஞ்சுவாய் போ, போ, போ!
    நாணிலாது கெஞ்சுவாய் போ, போ, போ!
சென்றுபோன மெய்யெலாம் பொய்யாக
    சிந்தைகொண்டு போற்றுவாய் போ, போ, போ!
வென்றுநின்ற மெய்யெலாம் பொய்யாக
    விழிமயங்கி நோக்குவாய் போ, போ, போ!

இதைக் கேட்டுக்கொண் டிருந்த பத்தர் மகன் கூக்குர லிட்டுக்கொண்டு, "போறேன்" என்று கத்தி, கீழே விழுந்தான். தந்தையார் ஓடிச்சென்று அவனைத் தூக்கி மடியில் கிடத்திக்கொண்டு ஆசுவாசப்படுத்தினார். பின்பு அவனை அன்பான, ஹிதமான, தைரியத்தையும் உற்சாகத்தையும் ஊட்டும்படியான வார்த்தைகள் சொல்லித் தேற்றினார். பத்து நாளில் அவன் முற்றிலும் குணமடைந்தான். பத்தரின் மகிழ்ச்சிக்குக் கங்குகரை யில்லை. "சாமீ! 'பாடற மாட்டுக்குப் பாடிக் கறக்கணும், ஆடற மாட்டுக்கு ஆடிக் கறக்கணும்.' பேயைத் தோத்திரம் பாடித் தொழுதால் போகாது. அடிச்சு விரட்டணும்."

தந்தை, "ஆமாம் பத்தரே!" என்று தட்டிக் கொடுத்தார். அவர் சென்ற பின்பு "நம்பிக்கை மனிதனுக்குச் சிறந்த ஔஷதம். ஒன்றிலும் தீராத நோய் என்னிடமுள்ள நம்பிக்கையினால் தீர்ந்துவிட்டது பார்த்தாயா? பத்தர் மகனுக்கு நோய்தீர்ந்ததைப்போல், நம் நாட்டுக்கும் நோய் தெளிந்து, தேசம் சுபிட்சமடைய வேண்டும் பராசக்தி!" என்று சக்தியை வணங்கினார். மேலேயுள்ள பாட்டு இந்த சந்தர்ப்பத்தில் எழுதியதன்று. பத்தரைச் சமாதானப்படுத்துவதற்காக அந்தச் சமயத்தில் அதைப் பாடினார்.

## சொல்

தெய்வ சக்திகளை நம்முள்ளே நிலைபெறச் செய்யும் சொல் வேண்டும். மனோநிலையைத் தெரிவிக்கச் சொல் தானே முக்கியம்? சொல்லின் மூலமாகத்தானே மந்திர சக்தி உருவாகிறது. தந்தையார் எந்த விஷயத்தையும் லேசில் விடமாட்டார். "என்ன சொன்னால் சொல் வெற்றி யடையும்? எந்தச் சொல்லினால் தேவரைக் கட்டலாம்?" அதாவது நாமும் தேவர்களாக ஆகலாம்? தேவராவது என்றால் இறக்கை முளைத்துத் தேவலோகத்தில் வசிப்பவர் என்று அர்த்தமில்லை. பயனுடைய வாழ்க்கை வாழ்பவர் அமரர்கள் என்பது தந்தையாரின் சித்தாந்தம்.

"பயன் பெற்ற வாழ்க்கை யாது?" அச்சத்தை அறவே நீக்கி, துன்பக் கலப்பற்ற - மனதில், மாசற்ற, பகைமையற்ற - அன்பு முதிர்ந்த வாழ்க்கை. இதை யடைய என்ன செய்வது? இதைப்பற்றி நாங்கள் வெகு நேரம் பேசிக்கொண் டிருந்தோம். சரணாகதி யடைந்துவிட்டால் கட்டாயம் கடவுள் காப்பாற்றுவார் என்று தீவிரமாக நம்புவர் தந்தையார். ஆதலால் தேவர் களையே "எந்தவிதம் சொல் வேண்டும் உங்களைப் புகழ" என்று கேட்கிறார்.

**தேவர் வருக வென்று சொல்வதோ?—ஒரு**
**செம்மைத் தமிழ் மொழியை நாட்டினால்**
**ஆவலறிந்து வருவீர் கொலோ?—உம்மை**
**அன்றி ஒரு புகலு மில்லையே!**

ஓம் என்றுரைத்து விடில் போதுமோ?—அதில்
உண்மைப் பொரு ளறிய லாகுமோ ?
தீமை யனைத்து மிறந் தேகுமோ?—என்றன்
சித்தம் தெளிவு நிலை கூடுமோ?

"உண்மை யொளிர்க" வென்று பாடவோ—அதில்
உங்கள் மனம் பொருந்தக் கூடுமோ ?"
வண்மை யுடையதொரு சொல்லினால்-உங்கள்
வாழ்வு பெற விரும்பி நிற்கின்றோம்".

"தீமை யகத்தினிடை மூட்டுவோம்" என்று
செப்பு மொழி வலிய நாகுமோ ?
ஈயைக் கருடநிலை ஏற்றுவீர்; எம்மை
என்றுந் துயர மின்றி வாழ்த்துவீர்."

சொல் கூறுகிறது.

"ஒலி உலகத்தில் எனக்குக் கௌரவம் அதிகம். என்னைப் போல் பெருமை பெற்றவர் ஒருவரும் இல்லை. என்னை எழுத்தாளரும், பண்டிதர்களும் பலவந்தமாய்க் கொண்டு செல்கிறார்கள். நாள்தோறும் என்னை அழைக்க வருபவரின் கூட்டம் எண்ண முடியாது. சபைகளுக்கும் கூட்டங்களுக்கும், சென்று சென்று எனக்குத் தூங்குவதற்கும் அவகாசம் கிடைக்கவில்லை நான் "சொல்" இல்லாவிட்டால், ஒலி உலகில் எழுத்தாளரும், கவிகளும் என்ன பாடுபடுவர்? இத்தனை பிரபுத்வ மடைந்தும் என் வாழ்நாளை - கதையை - நான் இதுவரை சொல்ல முன்வர வில்லை. உலகில் ஒரு சிறு உழைப்பாளரையும் எல்லோரும் அபரிமிதமாய் புகழுகிறார்கள். ஆனால், என்னைப்பற்றி ஒருவரும் இதுவரை ஒரு வார்த்தைகூடச் சொல்லவில்லை. கவியரசன் பாரதி என்னைப் புகழ்கிறான். நான் மகிழ்வுடன் என் சுயசரிதையைக் கூறுகிறேன்.

"நான் பிறந்த வருஷம் தெரியாது. எங்கள் மூதாதை ஆதிசேஷன். சுயேச்சையை விரும்புவேன். நான் கட்டுப் பட்டு வாழ விரும்பேன். தேசத்திற்கேற்ற மொழி வகுத்திருக்கிறேன். நான் ஏழை, பணக்காரன், உயர்வு, தாழ்வு ஒன்றும் பார்க்க மாட்டேன். மற்றோருக்கு உதவி செய்யாமல் இருக்கும் ஒவ்வொரு விநாடியையும் வெறுப் பேன். நான் சிறு எழுத்தாளரின் துயரை, வார்த்தைப் பஞ்சத்தை நீக்குவேன். நான் கிருபை செய்யாவிடில் பிரசங்கி எவ்விதம் வீழ்ச்சியடைவான் என்பதற்கு ஒரு உதாரணம் கூறுகிறேன். ஒரு பிரசங்கி எழுந்து நின்றார். தம் வித்தையைக் காண்பிக்க அனேக சாஸ்திரங்களை எடுத்துக்காட்ட முயன்றார். ஆனால், ஒரு சாஸ்திரமும் முறையாகக் கற்றவரன்று; கேள்வி ஞானம் மட்டும் சிறிது பெற்றவர்; எழுந்து நின்றார். என்ன சொல்வது? கவலை யில் வார்த்தை அவர் வாயினின்றும் வர மறுத்தது. சட் டைப் பித்தானைத் திருகுவதும் கைகுட்டையைப் பிரித்து மடிப்பதும், சுற்று முற்றும் பார்ப்பதுமா யிருந்தார். நெற்றியில் முத்து முத்தாய் வியர்வை துளித்தது. தாமரை போல் மலர்ந்திருந்த அவர் முகம் கூம்பியது. நான் இதைக் கண்டு இரக்க முற்று அவரெதிரில் நின்றேன். 'கனவானே! உள்ளத்தில் உண்மை ஒளி யுண்டாயின் வாக்கினிலே யொளி யுண்டாகும். நல்ல சித்தத்தோடு ஆரம்பம் செய்யும். வெற்றி யுண்டாகும்' என்றேன். என்னைப் பார்த்தவுடன் கனவானுக்கு உயிர் வந்தது. மனம் குளிர்ந்தது. அவருக்கேற்பட்ட பதட்டம் நீங்கிற்று. சிறிது நேரத்திற்கு முன்பு அவர் முகத்தில் படர்ந்த கவலை யென்னும் மேகங்கள் எனது பிரவேசத்தினால் சிதறுண்டு மறைந்தன உற்சாக மென்னும் சூரியனைக் கண்டு. இனி யென்ன? பிரசங்கம் காளமேகம் பொழிந்ததுபோல் செய்தார்...இடைவிடாத கரகோஷம் காது செவிடுபடும் படி நடந்தது.

"நான் மூடர்களை வித்துவான் ஆக்குவேன். யுக்தி தெரியாதவர்களுக்கு யுக்தி சொல்வேன். எழுத்தாளருக்கு மனோபாவத்தை உணர்த்தும் "சொல்" அகப்படாவிட்டால் உடனே அதைச் சொல்வேன். கவிஞர்களுக்கு உவமை கூறுவேன். அறைகுறையான வேலையைப் பூர்த்தி செய்வேன். நான் இல்லாவிடில் உலகேது? என்றால் தெய்வ சக்தி மனிதன் வாக்கில் ஏற்படுகிறது.

"ஊருக்கு நல்லது சொல்வேன்—எனக்கு
உண்மை தெரிந்தது சொல்வேன்.



## வினாவும் விடையும்

புதுவையில், போன ஜர்மனி யுத்தம் நடந்துகொண்டிருந்தபொழுது, ஓர் நாள் தந்தை மிகவும் மனச்சோர்வுடன் உட்கார்ந்திருந்தார். "என்ன உலகம், என்ன நாகரிகம். ஒருவருக்கொருவர் குற்றம் சொல்லிக்கொண்டு, ஊர் மக்களை யெல்லாம் துன்புறுத்துகிறார்களே ! இந்தக் கஷ்டம் எப்பொழுது நீங்கும்; ஜனங்கள் உணவும் உடையுமின்றி வருந்தி யுழலுகிறார்கள். வலியவர் எளியோரை வாட்டுகின்றனர். என்ன அநியாயம் ? மனிதன் மிருக வாழ்வு நடத்துகிறான். இந்தவித வாழ்வு எத்தனை நாள் வாழ்வது ? இதற்கு ஒரு முடிவு கிடையாதா ? பராசக்தி ! இத் துன்பம் நீங்க ஒரு வழியும் காணவில்லையே ! "

தேடிச் சோறு நிதந் தின்று—பல
சின்னஞ் சிறு கதைகள் பேசி—மனம்
வாடித் துன்ப மிக வுழன்று—பிறர்
வாடப் பல செயல்கள் செய்து—நரை
கூடிக் கிழப் பருவ மெய்தி—கொடுங்
கூற்றுக் கிரையெனப் பின் மாயும்—பல
வேடிக்கை மனிதரைப் போலே—நான்
வீழ்வே னென்று நினைத்தாயோ ?

தாயே! முதலில் என்னைத் திருத்திக்கொள்ளவே என்னால் முடியவில்லை. நான் உலகைத் திருத்த ஆவல்கொள்கிறேன். தாயே! எனது துர்க்குணங்கள் என்று ஒழியும் ? என்னால் சகிக்க முடியவில்லையே !

மோகத்தைக் கொன்றுவிடு—அல்லால் எந்தன்
மூச்சை நிறுத்திவிடு
தேகத்தைச் சாய்த்துவிடு—அல்லால் அதில்
சிந்தனை மாய்த்துவிடு
யோகத் திருத்திவிடு— அல்லால் எந்தன்
ஊனைச் சிதைத்துவிடு
ஏகத் திருந்துலகம் இங்குள்ளன
யாவையும் செய்பவளே !

பந்தத்தை நீக்கிவிடு—அல்லால் உயிர்ப்
பாரத்தைப் போக்கிவிடு
சிந்தை தெளிவாக்கு—அல்லால் இதைச்
செத்தவுட லாக்கு
இந்தப் பதர்களையே—எல்லாம் என
எண்ணி யிருப்பேனோ
எந்தப் பொருளிலுமே—உள்ளே நின்
றியங்கி யிருப்பவளே.

தேவியின் வாக்கு :—

மகனே அஞ்சாதே ! நான் பழைய கர்நாடக வழக்கத்தை அழித்துச் சாம்பலாக்கி, புது ஜீவனைக் கொடுத்து உலகத்தில் சஞ்சரிக்கிறேன். நான் எப்பொழுதும் புதிய இளமையுடன் முதுமையை அழிக்கிறேன். நான் இருக்குமிடம் உயிர் நிலவும். நான் இல்லாவிட்டால் அங்கு சாவு. துஷ்கிருத்யத்தினால் துன்பப்படும் மனிதருக்கு நான் நம்பிக்கை யளிப்பேன். உன்னைப் போன்றாரின் உயர்ந்த கனவு நான்.

கிழவர்கள் என்னைக் கண்டு நடுங்குகிறார்கள். இளைஞர்கள் என்னை ஆனந்தத்தோடு தழுவுகிறார்கள். நான் செல்லுமிடத்தில் பழங் குப்பை கூளம் சுத்தஞ் செய்யப் பட்டு, தெய்விக ஒளி பிரகாசிக்க ஆரம்பிக்கும். நான் உலகில் கட்டுக்களை அறுத்தெறிந்து, மனிதருக்கு சுய மதிப்பு அளித்து, அமுத முண்ணச் செய்கிறேன். என் பெயர் சக்தி.

நான் நிகழ்காலத்தை அழித்து, அழகிய, பிரகாசமான, பாக்கியத்துடன் கூடிய எதிர்காலத்தைப் படைத்துக் கொண்டிருக்கிறேன்.

நான் வஸந்த தேவி. காற்றினாலும், புயலினாலும் பழைய சருகுகளை உதிர்த்துத் தள்ளி உலக உத்தியான வனத்தில் அழகிய வெவ்வேறு வர்ணங்கொண்ட மலர்களை நிரப்புவேன். நான் பாபத்தைப் போக்கும் துர்க்கை. நான் சமூகத்து எல்லா அநீதிகளையும் அழிப்பவள். சுயநலம் இந்த அநீதிகளுக்கு முக்கியமான காரணம். இதன் கொடிய தன்மையினால், சமூகத்தில் பொறுக்க முடியாத அக்கிரமம் ஏற்பட்டு, பெரிய அனர்த்தங்கள் விளைகின்றன. ஜாக்கிரதை! உங்கள் பாபச் சுமை அதிகரித்து விட்டது. பாவிகளுக்குப் பயங்கரமாயிருப்பேன். பாவிகள் தங்கள் செய்கையின் பயனை அநுபவிக்கும் காலம் வந்துவிட்டது. தீண்டாமையை ஒழிக்கும் நாள் வந்து விட்டது. ஜாதிபேதங்களை உடைக்கும் காலம் வந்து விட்டது.

நான் எல்லாவிதப் பொய் ஆடம்பரத்தையும் நாசம் செய்பவள். எல்லாவித மூடப் பொய்நம்பிக்கையையும் அழிப்பவள். நினைவுகூருங்கள். பகட்டுக்குப் பகை நான். வேஷதாரிகளுக்கு நான் யமன். மற்றவரை அடிமை யென்று எண்ணுபவனை அடக்குவேன். சாப்பாட்டு ராமர் களையும், மதத்தின் பேரால் அநியாயம் செய்பவனையும், மண்ணில் சேர்த்துவிடுவேன். மோக வலையை அறுத்து மனிதனை உலகை ஆளும்படி செய்வேன். பெரிய தொந்தி படைத்தவரையும் "பெரிய மனிதர்"களையும் வீழ்த்தி, உழைப்பாளிகளையும், உண்மையாளரையும் உயர்த்து வேன். நான் ஒவ்வொருவரையும் தன்னை உணரச் செய் வேன். மற்றோரைச் சார்ந்து நிற்காமல் தானே நிலைத்து நிற்கப் பழக்குவேன். நானே சுதந்திரம்.

நான் எல்லாவித அடிமைத் தளைகளையும் அறுப்பவள். ஏனெனில், சுதந்திரம் ஒவ்வொருவருக்கும் இன்றி யமையாதது. அதைவிட உயர்ந்த பொருள் வேறொன் றில்லை. சிறிய பேதங்களை அழிப்பேன். இப்போது மாசடைந்த நீரோடையைப்போல் மனிதர்களது ரத்தம் தேங்கி நிற்கிறது. உலகத்தாரின் உடம்பில் சுத்த ரத்தம் ஓடப்பண்ணி, மனித வாழ்வை அமர வாழ்வாக ஆக்க முயல்வேன். கர்ம யோகம் செய்வேன். யோக்கியனை உயர்த்தி நீசனைக் கீழே தள்ளுவேன். நானே கர்ம பலனைக் கொடுப்பவள். "நல்லவருக்கு நயம் புரிவேன். அல்லவரை விழுங்குவேன்." குணத்திற் கேற்ப வர்ணாசிரமம் நியமிப் பேன். நான் பாபத்தை அழிக்கும் கங்கா நதியின் பெரு வெள்ளம் போன்றவள். அநியாயம் செய்வோன், வேட தாரி, யார் எதிர்ப்பட்டாலும் அடித்து வீழ்த்தி முழுக்கி விடுவேன். நான் ஆயிரக்கணக்கான, பழக்க வழக்கங்களை நீக்க வந்திருக்கிறேன். நான் ஏழ்மையை அழிக்க வந்திருக் கிறேன்.

" தாயே! உன் பொன்மொழி கேட்டு மகிழ்ந்தேன். மாறி மாறிப் பின்னும், மாறி மாறிப் பின்னும், மாறி மாறிப் போம் வழக்கமே தானுவாய். உனது பெருமையை உள்ளபடி உணராத சிற்றறிவுடைய நான், சிறு துன்பம் உண்டானதும் மனம் சோர்ந்துவிடுகிறேன். ஆக்கத்திற் கும் அழிவுக்கும் காரணமான தேவி! உன் நோக்கம் வெற்றியடைக" என்று வணங்கினார் தந்தை.



# ஜெயமுண்டு

புதுவையில் பன்னிரண்டு வருஷம் அக்ஞாதவாசத்திற்கும் எங்களுக்கு வசிக்க ரொம்ப சௌகரியமாய் அமைந்த வீடு, ஈசுவரன் தருமராஜர் கோவில் வீதியிலுள்ள சபாபதிச் செட்டியாரின் வீடு. அந்த வீட்டு மாடியறையில் இப்பொழுதும் பராசக்தி களிநடம் புரிவாள் என்பது என் நம்பிக்கை. நினைத்துப் பார்த்தால் துக்கம் தொண்டையை அடைக்கிறது; ஆனந்தம் கண்ணீராய் ஓடுகிறது; மனம் ஸ்தம்பித்துவிடுகிறது. ஒவ்வொரு நாளும் கவிவாணி தந்தையின் வாக்கினின்றும் புதிய அழகுடன் தோன்றி எங்களை மகிழ்விப்பாள். என் மனம் ஒருவித சஞ்சலமுமின்றி, விடுதலை பெற்றிருந்து சுகமடைந்தது அங்குதான். வானம்பாடியைப் போல் மனம் உற்சாகத்தோடு சங்கீத வானில் வட்டமிடும். தந்தையின் கவிதை, என்னை [12 வயதுதான் எனக்கு அப்பொழுது] முற்றுந் துறந்த ஒரு யோகியைப் போலாக்கிற்று.

துன்பம் நெருங்கி வந்தபோதும்—நாம்
சோர்ந்து விடலாகாது பாப்பா!
அன்பு மிகுந்த தெய்வமுண்டு—துன்பம்
அத்தனையும் போக்கிவிடும் பாப்பா!

என்று திரும்பத் திரும்ப அவர் கூறி, என் மனத்தில் பக்தி விதையை யூன்றினார். புதுவையில் சகிக்க முடியாத கஷ்டங்கள் நாங்கள் அநுபவித்தோம். அந்தக் கஷ்டங்களையும், வறுமையையும், தந்தையார் தமது வேடிக்கை, ஹாஸ்யம் இவற்றின் மூலமாகவும், உபதேசங்களாலும் போக்கிவிடுவார். மனத்தைத் துன்ப நினைப்புக்களிலிருந்து விரைவாக இழுத்து நல்ல விஷயங்களில் ஈடுபடச்

செய்வதில் தந்தையாருக்கு இணையாக யாரையுமே சொல்ல முடியாது. "ஜயமுண்டு பயமில்லை மனமே" என்ற பாட்டை மிக ரஸமாகப் பாடிக்கொண்டிருந்தோம். அந்தப் பாட்டின் சரணத்தின் கடைசி அடியாகிய "தொலையெட்டிக் கரையுற்று, துயரற்று விடுபட்டு துணிவுற்ற குலசக்தி சரணத்தில் முடிதொட்டு" [ஜய] தொலையெட்டி, தொலையெட்டி, தொலையெட்டி என்று மேல்தார ஸ்தாயியில் ஆவேசத்தோடு பாடிக்கொண் டிருந் தார் தந்தை. தாயார் மாடிக்கு வந்து "செட்டியார் வரு கிறார்" என்றார். தந்தை; "யாரு? விளக்கெண்ணை தானே?" "ஆம்." தந்தை சில நிமிஷம் மௌனமா யிருந் தார். பின்பு "செட்டியாருக்கு நாலு மாதத்து வாடகை கொடுக்க வேண்டுமே! மிகவும் மரியாதையுள்ளவரான படியால் நெருக்கிக் கேட்க மாட்டார். ஆனாலும், நாம் சீக்கிரம் கொடுத்துவிட வேண்டாமா? பணம் வர வில்லையே. அவர் வழவழ வென்று விளக்கெண்ணெய்போல் இருப்பதால்தான் நாமும் அவர் வீட்டில் சமானத்தோடு இருக்க முடிகிறது. இருந்தாலும் மனுஷ்யன் ரொம்பப் பொறுமை வாய்ந்தவர். பொறுமைப் பேறு எல்லார்க்கும் கிடைக்குமா? தெய்வத்திலும் மேம்பட்டவர் செட்டியார்" என்று கூறிவிட்டு,

சபாபதிக்கு வேறு தெய்வம்
சமானமாகுமா—புதுவை [சபா]

அபாரமான அருளுடைமையினால்
அடக்கிச் சினந் தன்னை
அன்பினை மேற்கொண்டான் — புதுவை [சபா]

என்று பாடினார். இதற்குள் செட்டியார் வந்து சேர்ந்தார். "என்னங்க, புதுப் பாட்டு எழுதியிருக்கீங்களா?" என்று கேட்டார். ஆம், என்றார் தந்தை. செட்டியாருக்கு விஷ

யம் விளங்கிவிட்டது. பாரதியாரே! நான் வாடகை கேட்க வரவில்லை. தாங்கள் புகழுமத்தனை பொறுமை என்னிடம் இல்லை. தங்கள் அருள் வாக்கினால் புகழப் பட்ட ஒரு பாக்கிய வசத்தினால் இனிமேல்தான் பொறுமை வரவேண்டும் என்று வணங்கி வீடு சென்றார்.



# நகைப்பு

ஒரு சிறிய தவறு செய்தாலும் அப்பாவின் கண்ணில் அது எப்படியோ பட்டுவிடும். நான் ஒரு நாள் எழுதிக் கொண்டிருந்தேன். யாரோ என்னைக் கூவி யழைத்த சத்தங் கேட்டது. அப்படியே மைப் புட்டியில் பேனாவைச் சொருகி வைத்துவிட்டு அவசரமாகச் சென்றேன். தந்தையாருக்கு அந்தச் சமயம் மௌனவிரதம். நான் வெகு நேரம் கழிந்தபின் திரும்ப வந்து பார்க்கும்போது, அந்தக் கடிதத்தில் பின்வருமாறு எழுதியிருந்தார், "முறையற்ற காரியம் செய்யாதே! மூடா, மூடா, மூடா."

"புன்னகை" என்பது சுகமான சிரிப்பு; எதிலுமே கணக்கின்றி மிதமிஞ்சினால் திகட்டிவிடும். இன்பம் துன்பம் எல்லாம் அப்படித்தான். அதைப்போலவே நகைப்பிலும், கோபச் சிரிப்பு, ஏளனச் சிரிப்பு, உற்சாகச் சிரிப்பு, துக்கச் சிரிப்பு, பேய்ச் சிரிப்பு முதலியன உண்டு. அவ்வளவிலும் மோகனப் புன்னகைதான் தனக்கும் மற்றவருக்கும் இன்பம் அளிக்கிறது. என் தோழிகளில் ஒருத்திக்குப் புன்னகை புரிதல் சுபாவம். ஆனால், அவள் வீட்டார் அவளை அதற்காக எப்போது கோபிப்பார்கள். "எப்போதும் என்ன சிரிப்பு? இது கெட்ட வழக்கம்" என்பார்கள். அவள் எவ்வளவு முயன்றும் அவளால் முகத்தை உம்மென்று நகைப்பின்றி வைத்துக்கொள்ளச் சாத்தியப்படவில்லை. இது அவர் வீட்டார் எண்ணியதைப் போலவே சங்கடத்திற்காளாக்கியது. வாலிபர்கள் ஒவ்வொருவரும், அவள் தங்களைத்தான் பார்த்து நகைக்கிறாள் என்று எண்ண ஆரம்பித்தனர். இதைத் தந்தையாரின் கூர்மையான கண்கள் கவனித்தன. பின்பு எல்லோரும், ஒன்றாக

இருந்த சமயம் பின்வருமாறு பிரசங்கம் புரிந்து, வாலிபர்களுக்கு நற்புத்தி புகட்டினுர்.

"அன்பான இளைஞர்களே! காதல் என்பது ஏதோ சாதாரண விஷயம் என்று நினைக்க வேண்டாம். அது தெய்விகமானது. எல்லோரும், காதல் புரிவதும் காதல் புரிந்த கன்னியரை மணம் புரிந்துகொள்வதும் சாத்தியமில்லை. ஏனெனில் நம் நாட்டில், இத்தனைவித சாதிகளும், இத்தனை கட்டுப்பாடுகளும், எத்தனையோ தினிசு வழக்கங்களும், சம்பிரதாயங்களும், நிறைந்திருக்கும்போது, "காதல் மணம்தான் வேண்டும்" என்ருல் நடக்காது. மணம் செய்தபின் ஒவ்வொரு இளைஞனும் தனக்கு வாய்த்த மனைவியின்பால் பரிபூர்ணமான பிரேமை செலுத்தி வந்தாஞல், தாஞகவே மனைவிக்கு அவனிடம் அன்பு ஏற்பட்டு, தாம்பத்ய வாழ்க்கை இனிது நடைபெறும். அதை விட்டு எந்தக் கன்னிகையாஞலும், கண்ணுக்குப் பார்க்க நன்ருயிருந்தால், அல்லது அவள் ஸரளமான ஸ்வபாவத்திஞல் புன்னகையோடிருந்தால் அவள் நம்மிடம் காதல் கொண்டு, அதஞல்தான் நகை முதத்தோடிருக்கிருள் என்று தப்பிதமான உணர்ச்சியோடு அவளிடம் நடந்துகொள்கிருர்கள். அது சரியல்ல. ஒவ்வொருவனும் ஸ்திரிகளுக்கு மரியாதை செலுத்த வேண்டும். ஆங்கிலேயர் ஸ்திரீகளுக்குத்தான் முதல் மரியாதை அளிக்கிருர்கள். வேண்டாத விஷயங்களுக் கெல்லாம் ஆங்கிலேயரைப் பின்பற்றி, அவர்கள் வழக்கங்களைக் கைக்கொள்ளும் நமது தேசத்தவர்கள் இதைச் சிறிதும் கவனியாமல் கேவலம் பெண்களை மிருகங்களாகவே மதித்து, அவர்களைக் கௌரவக் குறைவாக நடத்துகிருர்கள் இதுவரை செய்த பிழைகளுக்காக வருந்திக்கொண் டிருப்பதில் பயனில்லை. இனிமேல் ஒவ்வோர் இளைஞனும் ஸ்திரீகளுக்கு மனப்பூர்வமான மரியாதை யளித்துக் கூடுமானவரை தங்கள் வீட்டுப் பெண்களுக்குச் சுயமரியாதையாக

இருப்பதற்குச் சுதந்திரம் கொடுக்க வேண்டும். இதனால் நாடு நலம் பெறும்.

" வலிமை சேர்ப்பது தாய் முலைப்பாலடா!
மானம் சேர்க்கும் மனைவியின் வார்த்தைகள்
கலி யழிப்பது பெண்கள் அறமடா!
கைகள் கோத்துக் களித்து நின்றாடுவோம்

பெண்மை வாழ்கென்று கூத்திடுவோமடா!
பெண்மை வெல்கென்று கூத்திடுவோமடா
நன்மை யின்பநற் புண்ணியஞ் சேர்ந்தன
தாயின் பேரும் சதியென்ற நாமும்"

என்று பாடியதும் அங்கு நின்ற யாவரும் அவ்விதமாகவே செய்வோம் என்று தந்தையை வணங்கினர்.



## துணுக்குகள்

### நம் தாய்மார்கள்

ஒரு நாள் தந்தையாரிடம் தாயார் பதினைந்து ரூபாய் கொடுத்து, " குழந்தைகளுக்குச் சட்டை இல்லை. எனக்கு ரவிக்கை வேண்டும். நல்ல இமிடேஷன் ஸில்கு வாங்கி வாருங்கள்" என்றாள். அப்போதுதான் இமிடேஷன் ஸில்கு புதிதாக வந்திருந்தது. பளபள வென்று ஜ்வலித்துக் கொண்டும், நன்ருக உழைத்துக்கொண்டும், வெளுக்க வெளுக்கப் புது அழகுடன் இருந்ததாலும், எல்லோரும் அதை விரும்பி வாங்கினார்கள். தந்தையும் ஆகட்டும் என்று சொல்லிவிட்டு ஆபீஸ் சென்ருர். திரும்ப எட்டு மணிக்கு வீடு வந்ததும் ஒரு சிறு பொட்டலத்தை என் கையில் கொடுத்தார். தாயார் "இன்று துணி வாங்கிவரச் சௌகரியப்படவில்லையா?" என்று கேட்டாள். 'தங்கம்மா கையில் கொடுத்தேனே' எனவும், நான் விளக்கடியில் அதைப் பிரித்துப் பார்த்தேன். ஒரு காஞ்சீபுரம் ஜரிகைக் கொட்டடித் துண்டு இருந்தது. தாயார் அதைப் பார்த்து விட்டு, " ஸில்கு எங்கே?" என்ருர் "வாங்கவில்லை. இந்த ரவிக்கை உனக்குப் பிடிக்கவில்லையா?" தாயார் தந்தையார் பேச்சுக்கு மறுபேச்சுப்பேசும் வழக்கமேகிடையாது. ஆகையால் "ரவிக்கைத்துண்டு நன்ருயிருக்கிறது; விலை அதிகம் இருக்குமே?" "அதைப்பற்றி உனக்கென்ன கவலை. சரக்குக்கு ஏற்றவிலைதான். தவிரவும் நாட்டுத் துணி. எதிலும் இமிடேட் செய்தது எனக்குப் பிடிக்காது. நம் பதினைந்து ரூபாயும் ஷாங்காயி லிருக்கும் ஜப்பான்காரனுக்குப் போவதைக் காட்டிலும் நம் காஞ்சீபுரம் வியாபாரிக்கேனும் போய்ச் சேருவது நல்லதல்லவா?" என்ருர்.

## மானேஜர் கணநாதர்

புதுவையில்தான் எழுத்து வேலை யதிகம் செய்தார் அப்பா. "நமக்குத் தொழில் கவிதை; நாட்டுக் குழைத்தல். இமைப்பொழுதும் சோராதிருத்தல்" என்று சொல்வார். நான் "அப்பா! நாம் இப்படி நாட்டிற்கு உழைத்துக் கொண்டிருந்தால் நம் சொந்த வீட்டு வேலையை யார் பார்ப்பார்கள்" என்றேன். "உமைக்கினிய மைந்தன் கணநாதன் நம் குடியை வாழ்விப்பான். சிந்தையே யிம் மூன்றும் செய்" என்ருர். "அப்படியானல் பிள்ளையார் தான் நம்ம வீட்டு மானேஜர்" என்று நான் சிரித்தேன். "கொண்டவன் குறிப்பறிந்து நடப்பவளே மனைவி" என்ருர் திருவள்ளுவர். "எல்லார் மனக் குறிப்பும் அறிய வேண்டும்" என்பார் அப்பா. எங்கள் வீட்டில் நாங்கள் சமாசாரங்களை ஒருவருக்கொருவர் சொல்லிக்கொள்ள மாட்டோம். மனத்தை அறிந்து, சமயத்திற்கேற்ப நடக்க வேண்டும் என்பது எங்கள் வீட்டு விதி. தந்தை உற்சாகமாயிருக்கும் சமயத்தில் அவரிடம் செல்வோம். மற்ற சமயம் ஓரிடத்தில் அமர்ந்து விளையாட்டிலோ படிப்பிலோ கவனமா யிருப்போம். காலையில் எழுந்து தபால் ஆபீஸிற்குச்சென்று, பத்திரிகைகளை வாங்கி வந்து தந்தையாருக்கு அளித்து, மாலையில் அவர் எழுதும் கட்டுரை, வியாசம் முதலியவற்றைத் தபாலுக்கு அனுப்புவது இவைகளும் எங்கள் வேலைதான். ஒரு நாள் மாலை தபால் ஆபீஸ் செல்லும்பொழுது, யாரோ ஒருவன் இடைமறித்து, அன்பான குரலில் "பாப்பா! அந்தக் கடிதத்தை இப்படிக்கொடம்மா. பார்த்துவிட்டுக் கொடுக்கிறேன்" என்ருன். [பாப்பா என் தங்கை] "கொடுக்க முடியாது" என்ருள். அவன் புஞ்சிரிப்போடு "சரி வேண்டாம். உன் பேரென்ன சொல்லம்மா. அந்தக் கடிதம் எந்த ஊருக்கு எழுதியிருக்கிருர்? யாருக்கு எழுதியிருக்கிருர்?" என்று கேட்டான்.

பாப்பா கோபத்தோடு "அநாவசியமான கேள்வி கேட்காதே! சொல்ல முடியாது" என்றாள். "உன் பேரை மட்டும் சொல்லு." பாப்பா வெறுப்புக் கலந்த பார்வையுடன் "அவசியமில்லை. மாட்டேன்" எனவும், அவன் கோபத்தோடு, "குழந்தே! இதோ பார் உன்னைத் தூக்கிக்கொண்டு போய்விடுவேன்." பாப்பா இடிபோன்ற குரலில் "அடே! என்ன சொன்னாய்? என் உடம்பில் தமிழ்நாட்டு மறவனது இரத்தம் ஓடுகிறது. என்னைத் தொடக்கூட உன்னால் முடியாது" என்று கூறினாள். நாங்கள் விறுவிறு வென்று வேகமாய் நடந்தோம். தபால் ஆபீஸும் இதற்குள் சமீபித்துவிட்டது. குழந்தையின் வார்த்தைகளைக் கேட்டு அவன் திகைத்துப்போனான். அசையாமல் நாங்கள் போவதைப் பார்த்துக்கொண்டு நின்றான். பின்பு வீட்டிற்குப் போய்த் தந்தையாரிடம் இதைத் தெரிவித்தோம். அவர் சந்தோஷத்தினால் பூரித்துப்போனார். பின்பு "இப்படித்தான் செய்ய வேண்டும். சமயோசிதமாக நடந்தால் எல்லா ஆபத்தும் விலகிப் போகும்."

துன்பம் நெருங்கி வந்தபோதும் - நாம்
சோர்ந்துவிட லாகாது—பாப்பா
அன்பு மிகுந்த தெய்வமுண்டு - துன்பம்
அத்தனையும் போக்கிவிடும்—பாப்பா

என்று கூறிவிட்டு, "குழந்தைகாள்! நீங்கள் கூறியபடி நமது மானேஜர் கணநாதர் உங்களைக் காப்பாற்றுவார்" என்றார்.

## தாவர சாஸ்திரம்

சென்னையில் தம்பு செட்டித் தெருவில் அப்போது தந்தை இருந்தார். அப்போதுதான் சுதேச இயக்கம் தோன்ற ஆரம்பித்து இருந்தது. என் மாமா அப்பாத்

துரை அய்யரும் சென்னையில் தம் மனைவியுடன் வசித்து வந்தார். அந்தக் காலத்தில் சென்னைப் பட்டிணம் என்றால் கிராமவாசிகளுக்குப் பார்க்க ரொம்ப உற்சாகமாய் இருக்கும். இந்தக் காலத்தில் நகரத்து நாகரிகம் நாட்டுப் புறங்களிலும் அனேகமாய்ப் பரவிவிட்டது.

பட்டிணத்தைக் கண்டு கிராமவாசிகள் வியப்படைவதும் பயப்படுவதும் இப்போது நின்றுவிட்டது. நாகரிக முயற்சியினால் இப்போது பெண்கள் தனியே எந்நேரத்திலும் தாராளமாகப் போய்வர முடிகிறது. நாற்பது வருடங்களுக்கு முன்னால் சென்னை நகரத்திலும் பெண்கள் உள்ளேயே யிருக்க வேண்டும். துணையோடுதான் வாசலில் போகலாம். என் மாமி—[அப்பாதுரை அய்யரின் மனைவி] மிகவும் சரளமான சுபாவ முடையவர். சந்தேகமும், சங்கோசமும் அவரிடம் கிடையவே கிடையாது. கிராமாந்திரத்தில் பழகியவராதலால், வாயிற்புரத்தில் அதாவது வாசல் திண்ணை, வராண்டாவில் நிற்பது தவறு என்று அவருக்குத் தெரியாது. வாயிற் கதவை எப்போதும் சாத்தித் தாழிடுவதும் அவருக்குப் புதிய சமாசாரம். ஒரு நாள் மாமா, மாமி வாசற்புரத்தில் நிற்பதைப் பார்த்தார். கோபம் பிரமாதமாய் வந்துவிட்டது அவருக்கு. மனைவியை ஓர் அறைக்குள் அழைத்துச் சென்றார். பலமான வசவும், அடியும் உண்டாயிற்று. தந்தை இதைக் கவனித்தார். ஆனால், ஒன்றும் சொல்லவில்லை. திடீரென மாமாவின் நண்பர் ஒருவர் வந்து சேர்ந்தார். "அப்பாதுரை எங்கே? பாரதி!" என்றார். "இருக்கிறான்." "என்ன செய்கிறான்?" "மட்டை வைத்துக்கட்டுகிறான்." வந்தவர் பொருள் விளங்காமல் "மட்டையா? என்ன விஷயம்?" எனவும், தந்தை ஒரு கதைபோல ஆரம்பித்தார். "ஸ்திரீகள் புஷ்பச் செடிகளுக்குச் சமானமானவர்கள். அவர்களை ஒரு குறிப்பிட்ட வயதுவரை ஒழுங்காக வளர்க்க வேண்டும். நாம் ஒரு புஷ்பச் செடியை நட்டு, அது சிறிது உயர்ந்த

வுடன் அதன் இருபுறங்களிலும் சிறு சிறு குச்சிகளை நட்டு அந்தச் செடி கோணுமலும், உயர்ந்து வளருவதற்கும் ஏற்பாடு செய்கிறோம். கொடி வகையாளுலும் கயிறு கட்டிக் கொடிகளைத் தூக்கிவிட்டுப் பந்தலில் கொடிகள் படர ஆரம்பித்ததும், செடி நன்ருக பூரண வளர்ச்சி பெற்றுப் புஷ்பங்களை நமக்கு அளிக்கிறது. ஒவ்வொரு நாளும் மலர்ந்த புஷ்பங்களைப் பார்க்குந்தோறும், மனம் மட்டில்லா மகிழ்ச்சி பெறுகிறது. நாம் சற்று அசிரத்தை யாகச் செடிகளை வளரும் பருவத்தில் கவனிக்காவிட்டால், அது கோணலும் மாணலுமாய் திரும்பி அழகு கெடுவது டன், வேண்டிய அளவு பூக்களும் பூக்காது போய்விடும். அதைப்போல் பெண்களையும் தகுந்த சமயத்தில் மட்டை வைத்துக் கட்ட வேண்டும்" என்ருர். நண்பர் கருத்தை அறிந்துகொண்டு "அப்பா துரை செடி வளர்க்கும் தொழி லில் ஈடுபட்டு இருக்கிருரு?" என்று கேட்டார், தமா ஷூக்கு. மாமா இதைக் கேட்டுக்கொண்டு வந்து "என்ன தாவர ஆராய்ச்சியா?" என்ருர். எல்லோரும் சிரித்தனர்.

## ஹரி கதை

ஒரு நாள் புதுவையில் ஹரி கதை ஒன்றுக்குப் போனேம். போனவுடன் கதைக்கு ஏற்பாடு பண்ணி யிருந்த வீட்டுக்காரர் என் தந்தையை அழைத்துச் சென்று சபை நடுவே, பாகவதர் எதிரில் கொண்டு, உட்கார வைத் தார். உடனே பாகவதர் ஒரு பாட்டு ஆரம்பித்தார். "உம் சம்சாரத்தை எனக்குத் தாரும்" என்று. தந்தை திடுக்கிட்டார். என்ன பாட்டு இது? அடுத்த வார்த்தை என்ன சொல்லப் போகிருர் என்று பார்த்தால் சங்கதி மேல் சங்கதி போட்டு, பதினைந்து நிமிஷமாக்கினுர் பாக வதர். "என் சம்பத்தை உமக்குத் தருவேன், உம் சம் சாரத்தை எனக்குத் தாரும்" என்ற பின்புதான், கபீர்

தாஸ் சரித்திரம் என்பது விளங்கிற்று. பாகவதர் கதையை அழகாகக் கூறிக்கொண்டு போனார். அப்பொழுது அந்தச் செட்டியார் கபீர்தாஸின் மனைவியைப் பள்ளியறையில் சந்தித்ததும், பகவான் கிருஷ்ண பரமாத்மா அவ்வூர் கொத்தவால் வேஷத்தோடு அந்தச் செட்டியை அடித்துப் பயமுறுத்தியதையும், தன் வீட்டுக்கு வந்த மனைவி சுந்தராவைக் கண்டதும் கபீர் கோபமுற்று, "என் வாழ்க்கைப் பங்கம் செய்து, செட்டியை ஏமாற்றி வந்தாயே!" என்று கடிந்து, செட்டிவீட்டில் கொண்டுவிடவும், அவன் அவளைக் கண்டதும், பாம்பைக் கண்டதுபோல் பயந்து ஓடவும், கபீர் கோபமடங்காமல் அவ்வூர்க் கொத்தவாலை வாய்க்கு வந்தபடி ஏசவும் இவ்வளவுக்குமேல் பகவான் பிரத்யக்ஷமாகி, உண்மையைக் கூறி எல்லோரையும் சமாதானப்படுத்தி யனுப்பினார் என்று முடித்தார்.

பின்பு தந்தை பாகவதரிடம் விளையாட்டாக, "ஸ்வாமின்! எல்லாம் சரிதான். நான் வந்து உட்கார்ந்ததும் உட்காராததுமாக-"உம் சம்சாரத்தை எனக்குத் தாரும்" என்று ஓயாமல் பாடிக்கொண் டிருந்தீரே, இனிமேல் எங்கு பாடினாலும் சரி, என்ன சங்கதி போடுவதானாலும் சரி அடுத்த வாக்கியத்தைக் கூறிவிட்டுச் சங்கதிகளைப் போடும்" என்றார். அருகிலிருந்தவர் யாவரும் 'கொல்' லென்று சிரித்தனர்.

## தொட்டில் பழக்கம்

என் தந்தையார் என்னையும் என் தங்கையையும் பள்ளிக்கூடம் செல்ல அநுமதிக்கவில்லை. வீட்டில்தான் படிப்பு. வ. வே. சு. அய்யர், ஸ்ரீநிவாசாசாரியார், சுந்தரேசய்யர், ஸ்வாமிநாத தீக்ஷிதர் இவர்கள் வீட்டுக் குழந்தைகள் எங்களுடன் எப்போதும் இருப்பார்கள். ஒரு ஆசிரமம்போல் எங்கள் வீடு இருக்கும். ஒரு நாள் மேற்படி குழந்தைகள், நானும் என் தங்கையும் வைத்திருந்த

பொம்மை, விளையாட்டுச் சாமான் முதலியவைகளை எடுத்துக்கொண்டு கொடுக்க மாட்டோ மென்றனர். நாங்களும், அவர்களுக்கு அதைக் கொடுக்க மனமில்லாம லிருந்தோம். என் தந்தை எங்களிடமிருந்த பொம்மைகளை எல்லாம் [நான் காசியில் பள்ளிக்கூடத்தில் பரிசாக வாங்கிய பொம்மையுள்பட] எடுத்து, கூசாமல் அவர்களிடம் கொடுத்தார். என் தாயார் அந்தச் சமயம் அதைப் பார்த்து சற்று கோபமும், வருத்தமும் கொண்டு நின்றார். அப்பா:— ஊரார் குழந்தையை ஊட்டி வளர்த்தால் தன் குழந்தை தானே வளரும் என்றார். அம்மா :—ஊரார் குழந்தையை ஊட்டி வளர்த்தால் தன் குழந்தை தானே சாகும் சாகும் என்றார். தந்தை அப்பொழுது ஒன்றும் சொல்லவில்லை. சிறிது நேரம் பொறுத்து, "மனிதர்கள் எல்லோருக்கும் வாழ்நாள் இன்பமாகவே கழிந்துவிடுமென்று சொல்ல முடியாது. துன்பம் வந்த சமயம் மனம் உடைவதும் இன்பம் வந்த காலத்தில் மெய்மறந்து செறுக்குற்றுத் திரிவதும் கூடாது. ஜப்பானியர் குழந்தைகளின் கைகளைப் பனிக் கட்டியில் வைத்துப் பழக்குவார்கள். பின்பு கொதிக்கும் தண்ணீரில் கை வைக்கச் செய்வார்கள் என்று கேட்டிருக்கிறேன். அதுபோல, இப்பவேமுதல் தன் சாமான்களை பிறர் பிடுங்கிக்கொள்ளும் சமயம் பொறுமையுடனிருந்து பழகினால், பெரியவர்களாகி, சமான்களைப் பொருள்களை அந்நியர் கொண்டுபோக நேரிட்டால், அவ்வளவு கஷ்டப்பட மாட்டார்கள்" என்றார். "நன்றாயிருக்கிறதே! சோதனை" என்றாள் தாயார்.

## ஊஸ்டேரி

ஒரு நாள் புதுவைக்கு அடுத்தாற்போலுள்ள ஊஸ்டேரி என்னும் ஏரியைப் பார்க்க வேண்டும் என்று தீர்மானித்தோம். அந்த ஏரியைத் தந்தையார் அனேகந்

தடவை பார்த்திருப்பதனுல் நானும் தாயாரும் மட்டும் போக எண்ணினேம். என் தங்கை பாப்பாவுக்கு உடம்பு சரியில்லாதபடியால், அவளை அழைத்துப் போகவில்லை.

எங்களுக்குத் துணையாக வாத்தியார் சுப்பிரமணிய அய்யரும் அவரது தர்மபத்நி ஸ்ரீமதி ருக்மணி அம்மாள் ஆகிய இருவரும் வருவதாகச் சொன்னுர்கள். விடியற்காலம் நாலு மணிக்கு வண்டியில் ஊஸ்டேரி சென்ருேம். புதுவையும், சூழவிருந்த தென்னந் தோப்புக்களும், மாஞ்சோலையும், மர வகைகளும், எங்களுக்கு மட்டில்லா மகிழ்ச்சியைக் கொடுத்தன. அங்கு எட்டு மணிக்குப் போய்ச் சேர்ந்தோம். ஏரி பிரம்மாண்டமானது. ஏரிக் கரை யருகில் ஒரு சிறு பங்களாவும், தோட்டமு மிருந்தன. அதில் களைப் பாறி, கட்டுச் சாதத்தையும் சாப்பிட்டோம். வாத்தியார் சுப்பிரமணிய அய்யர் அவர்களும் கவிதைகள் புனைவார். தமது கவிதைக்குப் பொருள் கூறியும் [ஸயன்ஸ்] ரசாயன சாஸ்திரத்தைப்பற்றிச் சில வேடிக்கை விஷயங்கள் கூறியும் எனக்குப் பொழுது போகப்பண்ணினுர். பின்பு ஏரியின் நாலா பக்கங்களையும் சுற்றிப்பார்த்து, அதன் நடுவில் ஊறும் அன்னங்களைப் பார்த்து, "நமது பழைய காலத்துப் பெண்களை இந்த அன்னங்கள் ஞாபகப்படுத்துகிறது" என்ருர். மாலை 7-மணிக்கு வீடு திரும்பினேம். தந்தையார் ஏரியின் விசேஷங்களை என்னிடம் விசாரித்தார். பின்பு, "நம் வீட்டிலும் ஒரு வேடிக்கை நடந்தது. பாப்பா தூங்கி விழித்தவுடன் அம்மா எங்கே? என்ருள். நான் மாம்பழம் எங்கே என்றேன். அவள் சிறிது நேரம் பேசாம லிருந்தாள். மறுபடியும் "அம்மா எங்கே? அப்பா" "மாம்பழம் எங்கே வைத்திருக்கிருள் தெரியுமா பாப்பா." அம்மா எங்கே? அப்பா? "மாம்பழம் எங்கே?" பாப்பா முகத்தைச் சுளித்துக்கொண்டாள். பின்பு மாம்பழம் இருக்குமிடத்தைக் கண்டுபிடித்து அவளுக்கு எடுத்துக்கொடுத்தேன். பின்பு " அம்மாவும், தங்கம்மாவும் ஊஸ்டேரிக்

குப் போயிருக்கிருர்கள்" என்றேன். "இதற்குத்தாஞ இப்படி மாம்பழந் தேடினீர்கள்?" "இல்லை பாப்பா, உனக்கு மாம்பழம் கொடுக்கத்தான்" என்றேன். பாப்பா வாசலில் விளையாடச் சென்ருள். பின்பு தோன்றியது எனக்கு: ஸ்திரிகளுக்கு எத்துணை சகிப்புத்தன்மை யிருக்கிறது. புத்திசாலிக் குழந்தைகளுக்குப் பதில் சொல்லிச் சமாதானப்படுத்தவே இத்தனை பாடுபட வேண்டி யிருக்கிறது. முரண்டுபண்ணி அழுங் குழந்தைகள் நாலந்தை வைத்துக் குடித்தனஞ் செய்யுந் தாய்மார்களின் அவஸ்தை சொல்ல முடியுமா? அவர்கள் அந்தக் கஷ்டத்தைக் கஷ்டமாகக் கருதாமல்—பெரிய சுகமாகவே பாவித்து ஆனந்திக்கிருர்கள். நமது நாட்டுப் பெண்களின் பண்பட்ட மன நிலைக்கு ஈடாக வேறு ஒரு தேசத்திலும் கிடையாது. நமது ஹிந்து தர்மமே அன்பென்னும் அஸ்திவாரத்தில் அமைந்தது; அதனுல்தான் பாரத நாட்டுத் தாய்மார்கள் படிப்பில்லாவிட்டாலும், பணமற்றவர்களாய் இருந்தாலும், குழந்தை வளர்ப்பிலும் பராமரிப்பிலும் நாகரிகமடைந்த தேசத்தவர்களைக்காட்டி லும் நன்ருகஉழைக்கிருர் என்ருர்.

## கூட்டாஞ் சோறு

ஒரு சமயம் என் தாயார் கடையம் சென்றிருந்தார். நானும் தங்கையும் புதுவையி லிருந்தோம். அப்போது திடீரென்று தந்தையாருக்கு ஒரு யோசனை தோன்றியது. தமது நண்பர்களான ஐயர், ஸ்ரீநிவாசாசாரி முதலியவர்களை அழைத்து, எல்லோரும் ஒரே வீட்டிலிருந்து ஒரு உருவான தமிழ்ப் பணி செய்ய வேண்டும். அதற்கு இன்றையிலிருந்தே, ஆரம்பிக்க வேண்டும் என்று. தந்தையார் கூறும் யோசனையை அவர்கள் ஒருபோதும் மறுக்கவே மாட்டார்கள். உடனே சில தீர்மானங்கள் நிறைவேறின.

நான் அவர்கள் இயற்றும் கவிதை, கட்டுரைகளை முதலில் எழுத வேண்டும். பின்பு ஸ்ரீ ஆசாரியார் அதைத்

திருத்த வேண்டும் என்று. சாப்பாட்டுச் சாமான்களைச் சேகரிப்பதும் கட்டுரைகளை எழுதுவதற்குமே எனக்குப் பொழுது சரியா யிருந்தது. சாப்பாட்டு விஷயம் மட்டும் கஷ்டமா யிருந்தது. அவர்கள் ஒவ்வொருவர் சாப்பாடு ஒவ்வொரு வித ரகம். ஐயருக்குக் காரசாரமான சாப்பாடு. அப்பாவுக்கு நடுத்தரமான காரம் புளிப்பு. ஸ்ரீ ஆசாரியாருக்கு சிறு குழந்தைகளின் சாப்பாடுபோல், காரம், புளி மிகக் குறைவாயிருக்க வேண்டும். சாப்பாட்டு வகையிலும் வித்தியாசம்தான். ஐயருக்கு, சாம்பார், கறி, கூட்டு முதலியன. அப்பாவுக்கு அப்பளம், ஊறுகாய், வகைகள். ஆசாரியருக்குப் பருப்புச் சாற்றில் சிறிது மிளகுப் பொடி சேர்த்த "மிளகு சாத்தமுது" அதாவது ரஸம். சாப்பிடும்பொழுது அநேக ஹாஸ்யக் கட்டங்கள் நடைபெறும். பறிமாறுபவர்கள் தவறுதலாய் ஒருவருடைய கறிகளை மற்றவருக்குப் பறிமாறிவிடுவார்கள். ஆனால், எதைப் பறிமாறினாலும் அமிர்தம், அமிர்தம் என்று புகழ்ந்து சாப்பிடுவார்கள். இவ்வாறு நடைபெற்று வரும்போது, ஓர் நாள் எங்கள் ஸ்நேகிதையான வேதவல்லி வந்தாள். "பாரதியாரே! என்ன செய்கிறீர்கள்?" என்று கேட்டாள். தந்தையர் மிகவும் சந்தோஷத்தோடு எல்லோரும் கூடித் தொழில் செய்வதைக் கூறினார்.

வேதவல்லி :—பாரதியாரே! என்ன நீங்கள்கூட இப்படி மாறிவிட்டீர்கள்! கூட்டாஞ் சோறு சாப்பிடுவதில் நாட்டம் விழுந்தால் மற்ற காரியம் எப்படி ஐயா நடக்கும்?

தந்தை :—"உண்டவன் உரம் செய்வான்" என்று நீ கேள்விப்பட்டதில்லையா?

வேதவல்லி :—சரி பிராமணா போஜனப்பிரியா என்பது சரியாகிவிட்டது.

ஐயர் :—வயிற்றுக் குணவும், மனத்திற் குணவும் அளிக்கும் வேலை செய்கிறோம். இது என்ன குற்றமா?

வேதவல்லி :—உங்களுக்கு இப்படி யிருப்பது சௌகரியம்தான். வீட்டில் செல்லம்மாகூட இல்லாத சமயம் குழந்தைகளை இப்படி எல்லாப் பொறுப்பையும் எடுக்கச் சொன்னால் குழந்தைகளுக்கு உடம்பு அசௌகரியம் ஏற்பட்டுவிடாதா? சமையல் வேலை என்பது சாமான்யம் என்று எண்ணிவிட்டீர்களா? அதிலும் தினம் இருபது பேர்களுக்கு இரண்டு வேளை சமையலும், இரண்டு வேளை காப்பியும் தயார் செய்ய வேண்டுமே! குழந்தைகளால் அது முடியுமா?

ஐயர் :—தாயே, நாங்கள் இந்த விஷயத்தைக் கவனிக்காதது பிசகுதான். எங்களது தமிழ் வளர்ப்பின் மிதமிஞ்சிய ஆத்திரத்தினால் இந்த விஷயம் யோசிக்கவில்லை. எங்கள் அத்தனை பேருக்கும் அந்தக் குழந்தைகளால் சிசுருஷை செய்ய முடியாதுதான்.

தந்தை :—இந்தக் காரணத்தைச் சொல்லி எங்களைப் பிரிக்கப் பார்க்கிறாயா வேதவல்லி? எங்கள் ஒற்றுமை தீர்ந்திடோப.

வேதவல்லி :—உங்களை யார் பிரியச் சொன்னார்கள்? சாப்பாட்டிலும் நீங்கள் ஒன்றாயிருப்பது என்ன அவ்வளவு அவசியமா?

ஐயர், ஸ்ரீ ஆசாரி :— [இருவரும்] வேதவல்லி கூறுவதில் உண்மையிருக்கிறது. நாம் தனியேதொழில் செய்து, வார முடிவில் ஒன்றுசேர்ந்து நமது வேலையைக் கவனிப்போம். தந்தை இந்த ஏற்பாட்டை அரை மனத்தோடு ஒப்புக்கொண்டார். இவ்விதமாகக் கூட்டாஞ் சோறு சமாப்தி யடைந்தது.

## சங்கீதமும் தாளமும்

எங்களுக்குச் சங்கீத வகுப்பு நடந்துகொண் டிருந்தது. அந்த நாளில் பெண்கள் தாளம் போட்டுக்கொண்டு பாடு

வது அபூர்வம். எல்லோருக்கும் தாளத்தோடு பாடவராது. சிலர்தான் முறைப்படி நல்ல சங்கீதம் கற்பார்கள். ஆனால் எங்கள் வீட்டில் தாளத்தோடுதான் பாட்டு நடக்கும். தாளம் தப்பி விட்டால், தந்தையார் அசாத்திய மாய்க் கோபித்துக்கொள்வார். வாத்தியார் பிரமராய் அய்யர் என்று, தந்தையாரால் புனைபெயரிட்டு அன்புடன் மதிக்கப்படும் அன்பர் ஸ்ரீ சுப்பிரமணியஅய்யர் எங்களோடு அடிக்கடி வந்து மிருதங்கம் வாசித்து, எங்கள் கச்சேரியில் உற்சாகமூட்டுவார். அவரது தம்பியார் ஸ்ரீ ஸ்வாமிநாதய்யரும், மிருதங்கம், கஞ்சிரா, ஹார்மோனியம் இவைகளை வாசிப்பார். புதிதாகப் புனையப்பெற்ற கீர்த்தனங்களைத் தந்தையார் அபிநயத்துடன் பாட, வாத்தியார் சுப்பிரமணிய அய்யர் மிருதங்கம் வாசிக்கவும் கேட்டவர்கள் நாம் இருக்குமிடம் பூலோகம் என்பதையே மறந்து, திருக் கைலாயத்தில் ருத்ர நடனமும், நந்திகேசுவரர் மிருதங்கமும் கேட்பதாகவே எண்ணிவிடுவார்கள். அன்று வாத்தியார் வரவில்லை. நாங்கள் ஐந்தாறு பெண்களும், தந்தையாரின் சிஷ்யர்களில் சிலரும் பாட உட்கார்ந்தோம். தியாகராஜ ஸ்வாமிகளின் கிருதிகளில் தந்தையாருக்கு அளவற்ற பக்தி. அவரது கீர்த்தனைகளிலுள்ள பாவத்தையும், ரஞ்சகமான தன்மையையும், மிகமிகப் புகழ்வார். அன்று "ராமபக்தி ஸாம்ராஜ்ய" என்ற கீர்த்தனையைப் பாட ஆரம்பித்ததும், அந்தப் பாட்டு விசமத்தில் எடுப்பானபடியால் எங்களுக் கெல்லாம் சற்று கஷ்டமாய்த்தா னிருந்தது. தாள ஞானமே யில்லாத நண்பர் ஒருவர் எங்களில் உண்டு. அவருக்குச் சங்கீதம் கற்றுக்கொள்ள ரொம்ப ஆசை. அவரும் பாட ஆரம்பித்தார். "வருந்தினால் வாராததொன் றில்லை." அதனால் நீயும் பாட முயன்றால் சிறிது நேரத்தில் வந்துவிடும் என்று தந்தையார் அவரை ஊக்க முண்டாக்கிப் பாடச் செய்தார். ஆனால், சங்கீதமல்லவா ? எவ்வளவு நாள் உழைப்புக்குப்பின் பயன் கொடுக்கக்கூடிய கலை.

அவரால் பாட்டை ஆரம்பிக்கவே முடியவில்லை. உடனே தந்தையார் தாமே அருகில் உட்கார்ந்து சொல்லிக்கொடுக்க ஆரம்பித்தார். வரவே யில்லை. ராமபக்தி என்பதற்குப் பதிலாக இராமபக்தி என்று எடுத்தால்தான் அவருக்குக் கொஞ்சம் லகுவாகப் பாட முடிந்தது. தந்தை இராமபக்தி சரிதான். 'ஸாம்ராஜ்ய, எப்படி ஐயா? அதற்கு என்ன எழுத்தைச் சேர்க்கப்போகிறீர்?'' அஸாம் ராஜ்ய, என்றார் நண்பர். அதைக் கேட்டுச் சிரித்தார் அப்பா. இ. அ. சேர்க்காமல் பாடிப் பார்த்தால், நண்பரால் பாட முடியவில்லை. தந்தை அதைப் பார்த்து "தம்பீ! நீ எதை வேண்டுமானாலும் சொல்லு. இராம பக்தி அஸாம் ராஜ்யத்திலே என்று வேண்டுமானாலும் தெலுங்கைத் தமிழாக்கு. ஆனால், தர்ளத்தை மட்டும் கூளமாக்கி விடாதே!" என்றார். நண்பர்கள் யாவரும் நகை வெள்ளத்தில் மூழ்கினார்கள்.

## "டில்லி பாதுஷா"

ஒரு நாள் மாலை ஐந்து மணி. வாயிற் கதவு தடதட-வென்று தட்டப்பட்டது. எங்கள் வீட்டில் எல்லா வேலைகளுக்கும், காரியங்களுக்கும், சட்ட திட்டங்கள் வகுத்திருப்பார் அப்பா. அதன்படிதான் நடக்க வேண்டும். மீறினால் கடுந்தண்டனை விதிக்கப் பின்வாங்கார். யாரேனும் வந்தால் கதவைத் திறந்து, யாரென்று பார்த்து, அவர்களைக் கால் அலம்பச் சொல்லிவிட்டு நான் மாடிக்குப் போக வேண்டும். தந்தையார் மாடியிலிருப்பாரே தவிர அவர் மனம் கீழேதான் இருக்கும். நான் சிறு பெண் ஆனபடியால் எவனாவது வந்து கதவைத் தட்டி, தப்பிதம் ஏதாவது நேராமலிருக்க வேண்டுமே என்று அவர் கவலை. ஆனால், அதற்காகப் பெண்களை உள்ளேயே வைத்திருப்பது என்ற வழக்கம் பிரயோஜனமில்லை என்ற கொள்கையுடையவரானபடியால், என்னைக் கதவு திறக்க வேண்டும்

என்பார். கதவுச் சங்கிலியைத் திறந்து பார்க்கையிலேயே, அவர்கள் யார் என்பதைத் தெரிந்துகொண்டு, தெருவில் நடந்த புழுதியோடு, மாடியிலேறுதபடி அவரைக் கால் அலம்பும்படி சொல்லிவிட்டு [இவ்வளவும் ஒரு நிமிஷத்திற்குள் செய்ய வேண்டும்] வந்தவர் மாடியேறு முன்பு, அப்பாவிடம் வந்தவரைப்பற்றிய தகவல் சொல்ல வேண்டும். பின்பு அவர் வந்ததும், அவர்கள் சம்பாஷணையைக் கவனித்து அதற்கிசைய நடக்க வேண்டும். கதவு தட்டப்படும் சத்தங்கேட்டுக் கீழே சென்றேன். வந்தவர் சென்னை ஆசாமி யென்று நடையுடை பாவனையிலிருந்து தெரிந்துகொண்டேன். அவர் என்னை வெறிக்கப் பார்த்தார். மாடிக்கு வந்ததும் அவர் தயங்கினார். திணறினார் சுற்றுமுற்றும் பார்த்து திறுதிறு வென்று விழித்தார். எனக்குப் பெரிய சந்தேகமாய்விட்டது. பின்பு அது பயமாய் மாறிற்று. யாரையோ நன்றாய் விசாரியாமல் விட்டுவிட்டோமே, தந்தை கோபிப்பாரே! என்ன செய்வது? என்று. தந்தையார் மெதுவாக "என்ன ஸ்வாமி எந்த ஊர்? என்ன விசேஷமாய் வந்தீர்கள்? என்று விசாரித்தார். அவர் சற்று தைரியமடைந்து "இது பாரதியார் வீடுதானே?" என்றார். தந்தை "ஏன் உங்களுக்குச் சந்தேகம்? இதுவேதான்." அவர்—"இல்லை,...பாரதியார் வெளியே சென்றிருக்கலாமோ?" "ஸ்வாமி நான்தான் பாரதி." "விளையாடாதீர்! அவர் எங்கே சொல்லும்!" "என்ன ஐயா! இது! தர்மசங்கடம்! என்னைப் பாரதி யில்லை என்கிறீரே! என்ன காரணம் கொண்டு அவ்வாறு கூறுகிறீர்?" "பாரதியார் எழுதிய கவிகளையும் கட்டுரைகளையும் வாசித்திருக்கிறேன். பாரதியாரைக் கிழவராக, குறைந்தது ஐம்பது வயதாவது உடையவராக எதிர்பார்த்தேன். தாங்கள் முப்பது வயதுடைய யௌவன புருஷராகத் தோன்றுகிறீர். தங்களைப் பார்த்தால் டில்லி

பாதுஷாவோ, அல்லது துருக்கி சுல்தானே என்று தோன்றுகிறது."

தந்தை :—ஐயா! தாம் என்னைக் கிழவராக மதித்தேன் என்கிறீரே! என் கவிதை என்ன பழமை மிகுந்திருக்கிறதே! என்ன காரணம்?

அவர் :—நண்பரே! அங்ஙனமன்று. உங்கள் கவியில் அநுபவம் மிகுந்து விளங்குகிறது. இவ்வளவு அநுபவம் ஏற்பட குறைந்தது, அறுபது வயதாவது ஆகிருக்க வேண்டும் என்றார் அவர். பிறகு வெகுநேரம் பலவிதமாகச் சம்பாஷித்தனர். அவர் போகும்போது என் தந்தையின் பேச்சிலும் பாட்டிலும் மிகவும் ஈடுபட்டுவிட்டதாகவும், இந்த மாதிரி வரபுருஷர் உலகத்தில் அபூர்வமாக அவதாரம் செய்வார்களென்றும் மிகவும் புகழ்ந்துபோற்றி விட்டுப் போனார்.

மேலே கூறிய நண்பர் பாதுஷா என்றதும் தந்தை தானே ஜிஹாங்கிர் என்று பாவித்து, என் தாயாரிடத்தில்

"மக்கேகோ ஜாயங்கே
மன்னு காயாங்கே." ஹா-ரே
நூர்ஜஹான், ஹா—ஹாரே-நூர்ஜஹான்.

என்று பாடினார். பாட்டின் மற்ற அடிகள் எனக்குத் தற்சமயம் ஞாபகமில்லை. ஆனால், அவற்றின் அர்த்தம் மட்டும் ஞாபகமிருக்கிறது. "அதாவது நான் டில்லிக்கு மட்டும் பாதுஷா. என் அல்லா எனக்குமேல் பாதுஷாவாயிருந்து, குடிகளை நன்கு பரிபாலிப்பதால் எனக்குப் பொறுப்பு மட்டு. அவன்மேல் பாரத்தைப் போட்டுவிட்டு அமிருத பானம் செய்துகொண்டு மக்காவிற்குச் சென்று, அல்லாவைத் தியானிப்பேன்!" என் தாயாருக்கு ஹிந்தி தெரியாது. அர்த்தம் சொன்னதும், நானா நூர்ஜஹான்? சரிதான் என்று சிரித்தார்.

## " இன்ப வாழ்வு "

தினமும் தந்தையார் தாம் புதிதாகப் புனைந்த பாடல்களை முதலில் தாயாரிடம் படித்துக் காண்பிப்பார். பின்பு அவரது அருந் தோழர்களான ஐயர், ஸ்ரீநிவாசாசாரியார், அரவிந்தர், முதலியோரிடம் படித்துக் காட்டுவார். தமது கொள்கைகளைப் பிறரிடம் சொல்லி, அவர்கள் அதை எப்படி ரஸிக்கிறார்கள் என்பதை அறிந்த பின்பே, அவர் மனம் சமாதானப்படும்.

*சக்தி சக்தி சக்தியென்று சொல்லு—கெட்ட*
*சஞ்சலங்கள் யாவினையும் வெல்லு*
*சக்தி சக்தி சக்தி யென்று சொல்லு—இவள்*
*சந்நிதியிலே தொழுது நில்லு. - ஓம் [சக்தி]*

என்ற சக்திப் பாட்டை ஆவேசத்தோடு பாடுவதை ஸ்ரீ. வ. வே.சு. அய்யரின் செல்வக் குழந்தை கிருஷ்ணமூர்த்தி ரொம்பக் கவனமாய் கேட்டுக்கொண் டிருந்தான. குழந்தைக்கு அப்போது மூன்றுவயதுதான் இருக்கும். "நான் பாடட்டுமா மாமா ?" என்று மழலைமொழியில் கேட்டான் அக்குழந்தை. சரி என்றார்கள். பையனுக்கு 'ச' வராது. அதற்குப் பதில் 'க' தான் வரும். சக்தியைக் 'கத்தி' என்று நினைத்துக்கொண்டான். கத்தி அவனுக்கு நன்றாய்த் தெரிந்த சாமானுங்கூட. "கத்தி கத்தி கத்தி யென்று சொல்லு" என்றான். அரவிந்தர்கூடச் சிரித்துவிட்டார். பையன் கையையும் காலையும் ஆட்டிக்கொண்டு வீராவேசத்துடன் பாடுவதைப் பார்த்து, "வீரகுலத்தில் பிறந்த குழந்தையல்லவா ? பேஷ் !" என்று தட்டிக்கொடுத்தார் தந்தை. மறு நாள் ஐயர் வீட்டுக்குப் போனபொழுது ஐயர் கதை எழுதிக்கொண் டிருந்தார். குளத்தங்கரை அரச மரம். கதையில் பாதிதான் எழுதியிருந்தார். எங்களிடம் வாசித்துக் காண்பித்தார். "இதுபோன்ற சிறுகதைகள்

தான் நமது நாட்டிற்கு இப்போது தேவை.'' என்றார் தந்தை. நாங்கள் வீட்டுக்கு வந்தோம். ஐயரின் கதை மனதுக்குள் புகுந்துகொண் டிருந்தபடியால் வீட்டுக்கு வந்த பின்பும் அதைப்பற்றியே நாங்கள் பேசிக்கொண் டிருந்தோம். "கதை எப்படி முடியும் அப்பா?'' என்று நான் கேட்டேன். "ஐயர் ருக்மணியைக் கொலை செய்திருப்பார்'' என்றார் தந்தை.

"ஏன் சந்தோஷமான முடிவா யிருந்தா லென்ன?'' என்றேன் நான். "நீ சொல்லுவது சரி. சர்க்கரைத் தித்திப்பு ரொம்ப ருசிதான். ஆனால் சும்மா தின்றுகொண் டேயிருந்தால் தெவிட்டிவிடுமல்லவா? உடனே மிளகாய்ச் சட்னியைத் தேடுகிறோம். அதைப்போல் சிருங்கார ரஸத்திற்கும் சோகரஸ மிருந்தால்தான் சுவையதிகம்'' என்றார் தந்தை. மறு நாள் ஐயர் வீட்டுக்குச் சென்றதும் கதை அப்பாவின் ஊகத்தின்படியே முடிந்திருந்தது. நாங்கள் [அதாவது குழந்தைகள்] எல்லோரும் ருக்மணியின் கதையில் ரொம்பவும் ஈடுபட்டு அழுதேவிட்டோம். ஐயர் சொன்னார். "குழந்தைகளே! எதிர்காலம் எல்லோருக்கும் நல்ல காலமாக விருக்கும் என்று எண்ணுதீர்கள்! துன்பத்தை இன்பமாகவே கருதப் பழக வேண்டும். இனி மேல் வருங்காலத்து ஸ்திரீ ரத்னங்களாகிய நீங்கள், இவ்விதம் சிறிய துன்பங்களுக்கு மனத்தை ஓடியவிடக் கூடாது. நமது நாட்டில் எத்தனையோ பெண்கள், புருஷர்கள், அஞ்சா நெஞ்சத்தோடு, வாழ்க்கையில் தங்களுக்கு ஏற்படும் இன்னல்களைச் சகித்திருக்கிறார்கள்; மற்றவர்களுக்காக அரிய தியாகங்கள் செய்திருக்கிறார்கள். ராமாயணத்தில் லக்ஷ்மணன், அவன் மனைவி ஊர்மிளை, அவன் தாய் சுமித்திரை முதலியவர்களைப் பாருங்கள். வாழ்க்கையில் எத்தனையோ இடையூறுகள், தடங்கல்கள் ஏற்படும். முட்கள், அக்கினி யாறுகள், சேறு, பாலைவனங்கள் ஆகியவை யமலோகத்தி லிருப்பதாகக் கூறுவார்கள். ஆனால்,

அவைகள் அத்தனையும் நமது வாழ்க்கையில் நாம் நமது மனோ ரதங்களை, உன்னத லட்சியங்களை அடையச் செல்லும் வழியில் இருக்கின்றன. இந்த இடுக்கண்கள் தீருவதற்கு ஒரே வழிதான் உண்டு. அதாவது மனத்தை நேர்மையாக வைத்துக்கொள்ள வேண்டும். ஒவ்வொரு வித துக்கமும் தவறான. கேவலமான மனோபாவத்தால்தான் ஏற்படுகிறது. மனத்திலிருந்து மடமை நினைவுகளையும், அசுத்தமான, அருவருக்கத் தகுந்த எண்ணங்களையும் நீக்கினால், தானே மனிதன் இன்பநிலை யடைந்து வாழ்க்கையில் வெற்றிபெறு வான். மனத்தைத் தவறான நிலையில் வைத்திருப்பவன் அறிவு மங்கி நன்மை தீமைகளை அறியாமல் சதா துக்கத் தையே அநுபவிக்கிறான். தனது கஷ்டத்திற்குக் காரணம் மற்றவர்தான் என்றெண்ணி அவர்களைப் பகைக்கிறான். அவன் தன் எண்ணம் ஈடேறாமலும் விஷயங்களின் நியா யத்தையும், ஒழுக்கத்தையும் காணாமலும், இருண்ட வாழ்க்கையில் வாழ்நாளை நரகமாகத் தள்ளிக் கழிக்கிறான். உயர்ந்தவாழ்க்கையை விரும்புபவர்கள் துன்பம், சந்தேகம், துக்கம் இவைகள் நேர்ந்துவிட்டால் இது என்ன காரணத் தினால் ஏற்பட்டது என்று தன் மனத்தினிடம் தானே கேள்வி கேட்டுக்கொள்ள வேண்டும். தனியே விடை கிடைக்கும். பின்பு மனத்தைச் [அகத்தை] சுத்தமாக, - அதாவது நன்மை நினைப்புகளை அதிகமாக நினைக்க - செய்ய ஒவ்வொரு நாளும் முயன்று பார்க்க வேண்டும். திடசித்த மிருந்தால், அந்தச் சங்கல்பம் கைகூடும். அவன் பின்பு அமரநிலையை அடைகிறான்" என்றார்.

## இரண்டுவித அநுபவம்

விருந்தோம்பல் என்பது சுலபமான காரியமல்ல. வருப வர் மனங்கோணாமல் போக்கறிந்து விருந்திடல் நிரம்பவும் சிரமம். ஓர் நாள் புதுவை மடுவிற்கு அடுத்தாற்போலுள்ள "சிந்தாந்தசாமி கோயில்" என்று தந்தையார் பாடியுள்ள

கோயிலின் அருகிலுள்ள ஒரு வீட்டிற்குச் சென்றோம். அந்த வீட்டுக்காரர் மிகவும் நல்ல குணம் படைத்தவர். தந்தையாருக்கு நண்பர். எத்தனையோ நாட்களாக எங்களைத் தன் வீட்டிற்கு வரவேண்டுமென்று விரும்பி யழைத்திருந்தார். ஓர் நாள் சாவகாசம் கிடைத்ததால் அங்கு புறப்பட்டோம். அந்த நண்பர் எங்களை "வாருங்கள்" என்று உபசரித்தார். ஆனால், அவர் மனைவியோ எங்களைப் பார்த்தும் பாராது போலிருந்தார். சிறிது நேரம் அவர் வீட்டிலிருந்துவிட்டு மடுவிற்குச் சென்றோம்.

தந்தையாருக்கு மிகுந்த ஏமாற்றம். தாயாருக்கோ வருத்தம். தந்தையார் எங்களைச் சிறிது கடுகடுப்பாகப் பேசினர்.

தாயார் :—நாம் சென்ற வீட்டுக்காரர் சரியானபடி உபசரிக்காவிட்டால் நாம் என்ன செய்யலாம்?

தந்தை :-செய்யாதவருக்குச் செய்துகாட்டு. கொடாதவருக்குக் கொடுத்துக் காட்ட வேண்டும்.

தாயார் ;—[சலிப்போடு] வெகு அழகு நீங்கள் கூறுவது. இன்று புறப்பட்டது பிசகு. நான் வீட்டிலேயே இருந்திருக்க வேண்டும்.

தந்தை :—அதெல்லாம் ஒன்றுமில்லை. நமக்கும் 'சமதிருஷ்டி' வர வேண்டாமா? அவமதிப்புடன் நம்மை நடத்தும்பொழுது நாம் அளவற்ற பொறுமை வகித்து அவளிடம் அன்பாயிருக்கப் பழக வேண்டும். அதற்காகத்தான் அந்த அம்மாள் நம்மிடம் இப்படி நடந்துகொண்டாள் என்றார். தாயார் ஒன்றுமே சொல்லவில்லை. ஹோட்டலிலிருந்து தின்பண்டங்களும் வரவழைத்துச் சாப்பிட்டுவிட்டு ஊருக்குத் திரும்பினோம். மற்றொரு நண்பர் எதிர்ப்பட்டார். தந்தையாரை யணுகி அன்புடன் தம் வீட்டுக்கு அழைத்தார். தாயார் அதற்கிணங்க விரும்பவில்லை என்று அவர் முகம் காட்டிற்று. எல்லோருக்கும் நல்ல பசி. வீட்டிற்கே போய்விடலாமே என்றார் தாயார். "இல்லை

யம்மணி. அவசியம் என் வீட்டுக்கு வரத்தான் வேண்டும்" என்றார். அரை மனதோடு அவர் வீடு சென்றோம். அவர் வீடு குசேலர் வீட்டைப் போலிருந்தது. அந்த வீட்டு அம்மையோ மகாலக்ஷ்மியைப்போல் சிரித்த முகத்துடன் எங்களுக்கு வரவேற்பளித்தாள். கவிஞரும் அவர் குடும்பத்தாரும் என் வீட்டுக்கு வர என்ன பாக்கியம் செய்தேனே என்று கணவர் ஆனந்தம் கொண்டிருந்தார். எங்கள் சாப்பாட்டுக்கு வேண்டிய சாமான் அவர்கள் வீட்டிலில்லை. கொஞ்சம் தோசைமா மட்டும் இருந்தது. எண்ணெய், இலை, விறகு ஒன்றும் கிடையாது. அடுத்த வீட்டிற்குச் சென்று ஒரு கரண்டி எண்ணெய் வாங்கிவந்தாள். சமையற்கட்டிற்குக் கூரைவேய்ந்திருந்தது. அதிலிருந்துஇரண்டு ஓலையைப் பிரித்து அடுப்பு மூட்டித் தோசையையும் வார்த்தாள். தோசை ரொம்ப ருசியாயிருந்தது. எங்களுக்கு நல்ல பசி. அதோடு அந்த அம்மாளின் உள்ளன்பு. அதைப் பார்த்து எங்களுக்கு வயிறு நிரம்பிவிட்டது. தந்தையார் சந்தோஷத்தோடு மேற்படி நண்பரைப் பார்த்து "அடிசிற்கினியாளே, அன்புடையாளே, என்று தெய்வப் புலவர் திருவள்ளுவர் தம் மனைவியை நோக்கிக் கூறியது உமது மனைவிக்குப் பொருந்தும்" என்று புகழ்ந்தார். தமது வாயால் புகழுரை பெறுவதற்கு என் மனைவி பாக்கியம் செய்திருக்கிறாள் என்றார் அவர். சிறிது நேரத்தில் வீடு சென்றோம்.

## கீர்த்தியுண்டு

"கொத்தமல்லி, கருவேப்பிலை, கீரைத்தண்டு" என்று கூடைக்காரி சத்தம் போட்டுக்கொண்டு வந்தாள். என் தங்கை பாப்பா உடனே "இவள் வார்த்தைக்குக் நான் புதுக் கற்பனை செய்யப் போகிறேன்" என்றாள். சரி என்றார் அப்பா. நான் எல்லாவற்றையும்விடச் சின்னவளானபடியால் நான்தான் கொத்துமல்லி. தங்கம்மாள் கருவேப்பிலை. நீங்கள் கீரைத்தண்டு. நான் இல்லாமல்

சமையல் ருசிக்காது. ரஸத்துக்குக் கொத்துமல்லி யில்லா விட்டால், ரஸம் ரஸமாகவே இருக்காது. அம்மா தினம் ரஸத்திற்குக் கொத்துமல்லி ஞாபகமாக வாங்கிப் போடு கிருள். கருவேப்பிலைக்குக் கொத்துமல்லி யவ்வளவு ருசி கிடையாது. கொத்துமல்லிச் சட்னியைப்போல் ருசி எதற் குண்டு" என்று விளையாட்டுச் சண்டையைக் கிளறினுள். உடனே நான் "கருவேப்பிலை ரொம்ப மட்டமானது என்று உன் அபிப்பிராயமோ? சில சமையல்களுக்குக் கொத்துமல்லியைவிடக் கருவேப்பிலைதான் அவசியமாயிருக் கிறது. ரஸத்தைத் தவிர மற்ற எந்தக் கறிக்குக் கொத்து மல்லி அவசியம்? சாம்பார், அவியல், கூட்டு முதலியவை களுக்குப் பெருங்காயம் இல்லாமல் கருவேப்பிலை மட்டும் போட்டாலும்கூட அது ருசி குறையாமலும் மணமாகவும் இருக்கும். மேலும் வடை, அடை முதலிய தின்பண்டங் களுக்குக் கருவேப்பிலை போடாமல் முடியுமா? கொத்து மல்லியால் என்ன பிரயோசனம்?" என்றேன். இப்போது கீரைத்தண்டு தன் பெருமையைச் சொல்ல ஆரம்பித்தது. "நீங்கள் எல்லாம் உங்கள் பெருமையைச் சொல்லி வந்தீர் களே! நீங்கள் சாம்பாரிலோ, ரஸத்திலோ விழுந்தால் தான் உங்களுக்கு மதிப்புண்டு. நான் அப்படியில்லை. தனி யாகவே என்னை அநேகவித கறிகள் சமைக்கலாம். ஆறு மாதத்துக் கீரைத்தண்டுக் கூட்டு என்று போஜனப் பாடல்களில் புகழ்பெற்றிருக்கிறேன். நீங்கள் பார்வைக்கு அழகற்றவர்கள். கிள்ளி முகர்ந்து பார்த்தால்தான் உங்கள் பெருமையை உணர முடியும். என்னையோ மனிதர் பார்த்த மாத்திரத்திலேயே சந்தோஷப்படுகிருர்கள். தள தள, பளபள, வென்று ஓங்கி உயர்ந்து வளர்ந்திருக்கிறேன் வஞ்சமில்லாமல். நான் வெறுங் கீரைத்தண்டல்ல. என்னுல் உங்களுக்கெல்லாம் கீர்த்தியுண்டு" என்ருர். நாங்கள் சந்தோஷமும் வியப்பும் மேலிட்டுப் பேசாமலிருந் தோம். ஆனுல், அவர் "என்னுல் உங்களுக்குக் கீர்த்தி

யுண்டு" என்று கூடைக்காரியின் குரலில் கூறியது எவ்வளவு உண்மை என்பது இப்போதுதான் தெரிகிறது.

உ.

புதுவையில் தாராபாய் ஸர்க்கஸ் கம்பெனி வந்திருந்தது. ராமமூர்த்தி ஸர்க்கஸ் கம்பெனி வந்துபோன பிற்பாடு தாராபாய் ஸர்க்கஸ். அப்பொழுது நம் நாட்டில் யோகப் பயிற்சி குறைந்து சாப்பாட்டுப் பயிற்சி மிகுதியாயிருந்த காலம். அபூர்வமாக ஓரிருவர்தான் சரீரத்தை நன்றாக முறைப்படி பழக்கி, சொன்னபடி கேட்கும் வண்ணம் ஆக்கி, பார்ப்பவரை பிரமிக்கச் செய்தார்கள். மோட்டார் நிறுத்தல், நெஞ்சில் பாறையுடைத்தல், யானையை நெஞ்சில் ஏற்றிக்கொள்ளல், இந்த மாதிரி அநேக விதமான அப்யாஸங்களினால் ஜனங்களை பிரமிக்க வைத்தார் ராமமூர்த்தி. ஜனங்கள் நம் நாட்டில் இப்படி ஒரு வீர புருடன் இருக்கிறானே என்ற சந்தோஷத்தினால் பொங்கி "கலியுக வீமசேனன் ராமமூர்த்தி வாழ்க" என்றெல்லாம் ஆர்பரித்து குதூகலப் படுவார்கள். ராமமூர்த்தியின் சர்க்கஸை அடுத்து தாராபாயின். ஸர்கஸும் வந்தபடியால் அதைப் பார்க்க எல்லாரும் விரைந்ததைப் பற்றி ஆச்சரியப்படுதற்கில்லை. எங்கள் வீட்டிலும் ஸர்க்கஸுக்குப் போக வேண்டும் என்ற பரபரப்பு ஏற்பட்டது. ஆனால்?...ஆனால் என்ன என்கிறீர்களோ? அதற்குப் பணம்தான் இல்லை. நானும் பாப்பாவும் மனதிற்குள்ளாகப் புழுங்கினோம். அப்பாவிடம் பணம் ஏது? ஆயிரம் ரூபாய் வந்தாலும் நாளைக்கென்று ஒரு காசுகூட வைத்துக்கொள்ளத் தெரியாதவராயிற்றே! நேற்றுத்தான் கையிலிருந்த பத்து ரூபாயையும் செலவு செய்துவிட்டார். இன்று சர்க்கஸ் போய்த் தீரவேண்டும். என்ன செய்வது? என்று யோசித்துக் கொண்டிருக்கும் சமயத்தில் ஸ்ரீ. வ. வெ. சு. அய்யர் வந்து சேர்ந்தார். அவர் சொன்னார்:

" நாங்களும் சர்க்கஸ் பார்க்கப் போகிறோம். பெண்களுக்கெல்லாம் மூன்றாவது வகுப்பு டிக்கட் வாங்கினால் போதும் பணம் இல்லையென்று நீர் கவலைப்படாதேயும்." பிறகு அய்யர் வீட்டிற்குப் போய்விட்டார். அப்பாவின் முகத்தில் ஈயாடவில்லை. இதென்ன விஷயம்? அய்யருங்கூட பெண்களை முதல் வகுப்பில் உட்காத்த வேண்டும் என்று சொல்லாமல் போனாரே! பெண்களுக்குக் கடைசி வகுப்பாம்; ஆண்கள் சோபாவில் போய் சுகமாக உட்கார வேண்டுமாம் என்ற எண்ணத்தோடு மேல்மாடியில் குறுக்கும் நெடுக்குமாக உலாவினார். இரவு எட்டு மணிக்கு மேல்தான் சர்க்கஸ் ஆரம்பம். மணி ஏழரை ஆச்சு. நாங்கள் எல்லோரும் சாப்பிட்டாயிற்று. தந்தையாரை அழைப்பதற்குக்கூட எங்களுக்குப் பயம். " சரி. இன்று சர்க்கஸ் இல்லை " என்று தீர்மானித்து, நாங்கள் படுக்கைபோட ஆயத்தம் செய்தோம். வாசலில் குதிரை வண்டி ஒன்று வந்து நின்றது. அதிலிருந்து இருவர் கீழே இறங்கி வந்தார்கள். எங்கள் நண்பரும் மேற்படி சர்க்கஸ் கம்பெனி முதலாளியும் வந்து தந்தையாரிடம சோபாவுக்கு இலவச டிக்கட்டைக் கொடுத்துவிட்டு, "ஸ்வாமி! தங்களைப்போன்ற ரசிகர்தான் எங்களைப் போன்ற தொழிலாளரைக் காப்பாற்றுகிறார்கள். தாங்களும் தங்கள் குடும்பத்தாரும் இன்று குமாரி தாராபாய் சர்க்கஸை அவசியம் வந்து பார்க்க வேண்டும் " என்று உடனே வற்புறுத்தி அழைத்துச் சென்றார்.

## சமுத்திர ஸ்நானம்

புதுவையில் ஓர் அமாவாசை யன்று சமுத்திர ஸ்நானம் செய்வதற்காகச் சென்றோம். காலையில் கடல் கொந்தளிப்பு மிகவும் அதிகமா யிருந்தது. அலைமேல் அலை அடித்தது. நானும் என் தங்கையும் அலைகளைக் கண்டு நடுங்கினோம். அத்தனை உக்ரமாய் அன்று சமுத்திரம் கோஷித்துக்

கொண்டிருந்தது. தந்தையார் ஸ்நானம் செய்வதற்கு எத்தனித்தார். ஆனுல், அலைகள் அவரை ஸ்நானம் செய்ய விடாமல் புரட்டிப் புரட்டி எடுத்தது. எங்களுக்கோ கடலில் இறங்கவே பயமாயிருந்தது. ஆனுலும், தந்தையார், உத்திரவின்படியே நடக்க வேண்டுமானதால், சமுத்திரத்தில் இறங்கினேம். தந்தையார் கூறினர் :—எல்லோரும் ஒருமித்து ஸ்நானம் செய்ய இந்த அலைகள் இன்று விடாது போல் தோன்றுகிறது. அதனுல், நீங்கள் ஒவ்வொருவராகத் தான் ஸ்நானம் செய்ய வேண்டும். நான் ஒவ்வொருவராகக் குளிப்பாட்டிக் கரையில் விடுகிறேன் என்றுர். சரியென்று தங்கையைக் கரையில் இருக்கச் செய்து நான் தந்தையாரின் கையைப் பிடித்துக்கொண்டு தண்ணீரில் இறங்கினேன். 'ஓ'வென்று இரைச்சலிட்டுக்கொண்டு வந்தது ஓர் அலை. எனக்குக் கதிகலங்கிவிட்டது என்பதைக் கைகள் நடுங்குவதனுல் அறிந்த தந்தையார், தங்கம்மா ! கடல் பொங்கி வந்தால் கலங்க மாட்டோம். எங்கும் அஞ்சோம். எதற்கும் அஞ்சோம், எப்போதும் அஞ்சோம். அச்சமில்லை, அச்சமில்லை, அச்சமில்லை என்று கோஷித்தார் அலைகளைக் காட்டிலும் உரத்த குரலில். அதைக் கேட்டு என் மனம் சிறிது திடப்பட்டது. நான் எதிர்பார்த்த அலையோ, எங்களிடம் வந்ததும் உக்ரம் குறைந்து லேசாய் விட்டது. எங்களை அமுக்கவில்லை. தந்தை, தங்கம்மா இன்னும் கொஞ்ச தூரம் சென்றுவிட்டால் இந்த அலைகளின் உருட்டல் புரட்டல் இராது. சற்று முன்னுல் போவோம்; அங்கு ஸ்நானம் செய்ய சௌகரியமாகவிருக்கும் என்றுர். சிறிது முன்னுல் சென்ருேம். ஒரு சிறு அலை வந்து எங்களை மோதிற்று. அந்த அலை சிறிதாயிருந்தாலும் தந்தையாரின் கைப்பிடியினின்று பத்து கெஜ தூரம் என்னைப் பிரித்துக்கொண்டுபோய் புரட்டிப் புரட்டி எடுத்தது. திடீரென்று ஏற்பட்ட இந்த எதிர்பாராத நிகழ்ச்சியினுல், தந்தையாரின் மனம்கூடக் கலங்கி

விட்டது. ஓடோடித் தண்ணீருக்குள்ளே விழுந்திருந்த என்னைக் கண்டுபிடித்து என்னைத் தூக்கி எடுப்பதற்குள் அவர் மனம் பட்டபாடு சொல்ல முடியாது. உடனே என்னைக் கரையில் கொண்டுவிட்டுவிட்டு என் தங்கையை இடுப்பிலெடுத்துக்கொண்டு ஸ்நானம் செய்விக்கச் சென்றார். அவர் அவளைக் குளிப்பாட்டிக் கரையேறு முன்பு எங்களைச்சுற்றிக் கூட்டம் கூடிவிட்டது. போலிசாரும் வந்து சேர்ந்தனர்.

தந்தையாருக்கு ஒருவரது காரியத்தில் மற்றவர் பிரவேசித்து, வீண் வம்பு வளர்ப்பதென்றால் பிடிக்காது. வந்தவரில் ஒருவன் சொன்னான்: "வெகு நாழிகையாக நீங்கள் இந்தக் குழந்தைகளைக் கடலில் மூழ்கடிக்கப் பிரயத்தனம் செய்கிறீர்கள் ; அவர்கள் அணிந்திருக்கும் நகைகளைக் கவர்ந்து செல்வதற்கே இந்தச் சூழ்ச்சி என்று தெரிகிறது. நான் இந்த அக்கிரமத்தைப் பார்க்க சகியாதபடியினால், எல்லா ஜனங்களிடமும் சொல்லிப் போலிசாரையும் அழைத்து வந்தேன் " என்று சொன்னான். தந்தை பதிலே உரைக்க முடியாமல் வியப்பில் மூழ்கினார். கோபமோ ரௌத்ராகமாக வந்தது. என்ன நடக்குமோ என்று நாங்களும் பதறிப் போனோம். இதற்குள் போலிசாரும் எங்களை இன்னாரென்று தெரிந்துகொண்டபடியால் கூட்டத்தைக் கலைத்து விட்டார்கள். தந்தையார் போலிசாரிடம் "அப்பா! இப்போது என்மேல் குற்றம் சாட்டிக் கொண்டு வந்தானே அவனைப் பெரிய துப்பறியும் நிபுணராக நியமித்தால் உலகத்தில் கொலை களவு ஒன்றும் நடக்காமல் பார்த்துக்கொள்வான் அல்லவா ?" என்றார். அதைக் கேட்ட போலிசாரின் சிரிப்பின் சப்தம் கடல் இரைச்சலைக் காட்டிலும் பெரியதா யிருந்தது. நாங்கள் மெள்ள மெள்ள வீடு செல்லலானோம். வழியில் தந்தையார் மௌனமாகச் சென்றார். தாயாரிடம் இந்தச் சம்பவங்களை நான் கூறினேன். பெரிய அலை எங்களை அமுக்கிவிடும்

என்று நான் எண்ணியதற்கு மாருக, அது எங்களைத் தூக்கிவிட்டதும், சிறிய அலை ஒன்றும் செய்யாது என்று அலட்சியமாய் இருந்ததனால் அது என்னைப் புரட்டி எடுத்ததையும் கூறினேன். தந்தையார் "பார்த்தாயா? உருவத்தினின்றும் நாம் ஒன்றும் தீர்மானம் செய்வதற்கில்லை. இதெல்லாம் நமது செயலில்லை." "நினையாத விளைவெல்லாம் விளைந்துகூடி நினைத்த பயன் காண்பதவள் செய்கையன்றோ" என்ருர்.

"உண்மைதான்" என்றேன்.

## எதிரொலி

கடையத்தில் சாஸ்தாவின் கோவிலுக்குப் போகும் வழியில் உச்சி மாகாளி கோவில் என்ருெரு ஆலயம் இருக்கிறது. மலைப் பிரதேசமானபடியினுல் எதிரொலி ரொம்ப நன்ருகக் கேட்கும். சாஸ்தா கோவில் ஊரிலிருந்து ஐந்து மைல்கள் இருப்பதால் பாதி வழி வண்டியிலும் அதற்குமேல் ஒற்றையடிப் பாதை வழியாயும் நடந்து போக வேண்டும். தந்தையாருக்கு, [ஸ்ரீ பாரதியாருக்கு] மற்றவர் மனம் வருந்தும்படியும் மற்றவரைக் குத்தலாகவும் கிண்டலாகவும் பேசியும், கேலியும், நையாண்டியும் பரிகாசமும் செய்து துன்புறுத்துவோரைக் கண்டால் பிடிக்காது. இரட்டுற மொழிதல்—அதாவது இரண்டு பொருள் தொனிக்கப் பேசல்—அவருக்குப் பிடிக்கவே பிடிக்காது. தன்னிடத்திலுள்ள குறைகளை மனிதன் உடனுக்குடன் திருத்திக்கொள்ள வேண்டும் என்பதற்காக—பேசும்போதும் பாடும்போதும் வலித்துக்கொண்டும் திருகிக்கொண்டும், கோணிக்கொண்டும் இருப்பதைப் போக்க வேண்டும் என்பதற்காக—கண்ணுடிக்கு முன் நின்றுகொண்டே தான் பேசும்பொழுது முகபாவம் எப்படியிருக்கிறது என்றுகூடக் கவனிப்பார். திட்டுதல், தூஷித்தல், சபித்தல் முதலியவை கலைமகளை நிந்தித்தலுக்கு ஒப்

பாகும் என்பது அவர் எண்ணம். மற்றவரை சதா குற்றங் கண்டுபிடித்து, தானும் பிசகு செய்துவரும் வழக்கத்தை மிகவும் வெறுப்பார். ஆனால், எல்லோரும் நற்செய்கைகளை அப்பியசிப்பது வழக்கத்தில் கொண்டுவருவது கஷ்டத்திலும் கஷ்டமான விஷயம் என்பது அவர் அறியாததல்ல. ஒரு சமயம் மேலே கூறிய உச்சி மாகாளி கோவில் மலை வழியாக சாஸ்தா கோவிலுக்குப் போய்க்கொண் டிருந்தோம். குழந்தைகளும் பெரியவர்களும் அந்தக் கூட்டத்திலிருந்தார்கள். பையன்களில் ஒருவன்: "உச்சி மாகாளி" என்று கத்தினன். மலையிலிருந்து "உச்சி மாகாளி" என்று பதில் சப்தம் எதிரொலித்தது. "நீ நாசமாய்ப் போக" என்றான் அவன். தந்தை திடுக்கிட்டார். உடனே "நீ நாசமாய்ப் போக" என்று எதிரொலித்தது இயற்கை. பையனுக்குக் கோபம் வந்தது. எதிரொலி என்பதை மறந்து விட்டான். பின்பு அவன் தாய் பாஷையிலுள்ள வாசவுகளை யெல்லாம் உபயோகித்து எதிரொலிமேல் கோபத்தைக் காட்டினன். முறைப்படி எல்லாவற்றிற்கும் பதிலும் கிடைத்து வந்தது. தந்தை "தாயே பாராசக்தி! உன்னைப் புகழ்பவரைத் தான் இதுவரை பார்த்திருக்கிறேன். இன்று உன்னைத் திட்டுபவனையும் கண்டேன். இந்த மலையையும் அதன் எதிரொலியையும் இந்த முறையில் பயன்படுத்துகிறானே! நல்ல முறையில் சிந்தித்துப் பார்த்து எதிரொலியினல் என்ன பயன் பெறலாம் என்ற யோசிப்பவரைக் காணேமே! என்று கூறிவிட்டு, தாயே ஜனங்களுக்குப் பரந்த நோக்கத்தை அருள்செய்" என்று பாடலானர்.

**அகில லோகமும் ஆளவளே-எங்கள்**
**அம்மா அம்மா - அம்மா**

உடனே மலையிலிருந்து அம்மா அம்மா அம்மா என்று எதிரொலி வந்தது. அந்த ஒலி அங்கு இருந்த ஒவ்வொரு இதயத்திலும் ஊடுறுவிச் சென்று மனத்தை இளக்கிவிட்டது.

எல்லோருடைய வாயும் அம்மா, அம்மா என்று உச்சரித்தது. அந்தச் சிறுவனும் தன்னை யறியாமல் அம்மா அம்மா வென்று பாடினன். அதைப் பார்த்து எனக்குத் தாயுமான வர் பாட்டு,

அங்கமே நின்வடிவமான சுகர் கூப்பிட நீ
எங்கும் ஏன் ஏன் என்றதென்னே பராபரமே

என்றது நினைவுக்கு வந்தது. பின்பு தந்தை அந்தச் சிறுவனை யழைத்து, "அப்பா! திட்டுவது மிகவும் தீய ஒழுக்கம். தினை விதைத்தால் தினையும்—வினை விதைத்தால் வினையும் அறுவடை செய்யலாம் என்று நீ கேள்விப்பட்டிருக்கலாம், நகரங்களைவிடக் கிராமங்களிடையேதான் தெய்வ நம்பிக்கையும், பெரியோரிடம் வணக்கமும் நடைமுறையிலிருந்து வருகின்றன. அநியாயமாய் வாக்குத் தேவியை வதைக்காதே" என்று புத்திசொல்லி யனுப்பினர்.

## பாட்டின் சிதைவு

ஓர் நாள் தந்தையினிடம் ஒரு நண்பர் வந்து நாட்டுப் பாடலைப் பாடிக் காண்பித்தார். நம் நாட்டில் இப்போது தமிழ் நன்றாக வளர்ச்சியடைந்திருக்கிறது. தந்தையார் காலத்தில் ஜனங்களுக்கு ஆங்கிலம் மோகம் அதிகம் ஆகையால் மேற்படி நண்பர் பதங்களைச் சிதைத்தும், அதனால் பாட்டின் கருத்தே மாறிவிடும்படியும் பாடினர். தந்தையாருக்கோ கோபமும் அவமானமும் அதைக் கேட்டவுடன் உண்டாயிற்று. தன் கவிதையின், பொருளைக் கொலை செய்வதற்குக் கோபமும், தமிழ்நாட்டில் பிறந்து வளர்ந்த ஒருவன் இப்படித் தமிழை உச்சரிப்பதற்குங்கூட யோக்கியதை யில்லாமல், திக்கித் திணறுவதைக் கண்டு அவமானமும் அவரை வாட்டிற்று. நமது கவிதையை ஆசையோடு படித்து, நம்மிடமே 'ஸர்டிபிகேட்' வாங்க வேண்டு

மென்ற ஆவலுடன் வந்த ஒருவரை நாம், நீர் பாடுவது நன்று யில்லை யென்று கூறினால் அவர் மனம் என்ன பாடு படும் என்ற அநுதாபமும் தந்தையை அலைத்தது. வந்த வரோ நான் பாடிய முறை சரியா? தவறா? கூற வேண்டும் என்று அவசரப்படுத்துகிறார். தந்தை "அன்பரே ஒரு காரியம். நான் எக் காரணத்தை முன்னிட்டும் பொய்யே கூறுவதில்லை என்ற விரதம் கொண்டவன். உண்மையைச் சொன்னால் தாங்கள் மனம் வருந்துவீர்கள். தங்களை வருத்துவதில் எனக்குச் சம்மதமில்லை" என்றார். வந்தவர் "ஸ்வாமி, அப்படிச் சொல்லக் கூடாது. பிழையைத் திருத்த வேண்டும்" என்று வேண்டிக்கொண்டார். கதை மூலமாக தங்களுக்கு இதைத் தெளிவுபடுத்துகிறேன். "ஓர் ஊரில் ஒரு கவிராயர் இருந்தார். அவர் ஒரு சிறந்த கவி யென்று அந்த ஊரார் மிகவும் பாராட்டி மதித்து வந்தனர். ஓர் நாள் தற்செயலாக அந்தக் கவிராயர் ஒரு கொல்லன் பட்டறை வழியாகச் சென்றுகொண் டிருந்தார். கொல்லன் இனிய குரலில் பாடிக்கொண் டிருந்தான். கவி ராயர் கவனித்ததும் தாம் எழுதிய பாட்டு என்பது அவருக்குத் தெரிந்தது. கொல்லன் உற்சாக மேலீட்டால் பதங்களைச் சிதைத்தும், அழித்தும், தன் மனம் போனபடி பாடிக்கொண் டிருந்தான். கவிராயர் அதைக் கண்டு மனம் வருந்தி, கோபத்தினால் தன்னையும் மறந்தார். கொல்லனுடைய பட்டறையில் இருந்த சாமான்களை யெல்லாம் எடுத்துத் தாறுமாறாக வைத்து, குழப்பம் செய் தார். கொல்லன் கோபத்தோடு "யாரையா நீ என் பிழைப்பைக் கெடுக்கிறவன்? சிறிது நேரத்திற்குள்ளே பெரிய அழிவைச் செய்துவிட்டாயே என்றான். கவிராயர், "தம்பி! இப்போது நீ எனது ஜீவனத்தை பாழ்படுத்திக் கொண் டிருந்தாயே. அதுமட்டுந் தேவலையா?" கொல்லன் "உன் ஜீவனத்தை கெடுத்தேனா? எப்படி?" "தம்பி! நீ பாடிக்கொண் டிருந்த பாட்டு நான் எழுதியது. அதைத்

தாறுமாருய்ப் பாடினுய். உனது தவறு என்னை எப்படிப் புண்படுத்திற்று என்று காட்டுவதற்காக இந்தப்படி செய்தேன். இனிப் பொருள் தெரியாமல்பாட்டைக் கொலை செய்யாதே. என்று சொல்லி விட்டுப்போனுராம்'' என்று தந்தை கதையை முடித்தார். வந்தவர் தன் செய்கைக்கு வருந்தி மன்னிப்புக் கேட்டுக்கொண்டார். தந்தையார் தமது கவிதையை எப்படிப் பாட வேண்டும் என்று அவருக்குக் கற்பித்தார்.



# வசந்த காலம்

புதுவைக்கு அருகில் குசப்பாளையம் என்றொரு சிறு கிராமம் இருக்கிறது. அங்கு குயவர்கள்தான் அதிகமாய் வசிக்கிறார்கள். காலஞ் சென்ற வ. வே. சு. அய்யரும், தந்தையாரும் அங்கு ஒரு நாள் சென்றார்கள். குசப்பாளையத்தில் அருமையான வேலைப்பாடமைந்த பொம்மைகள் செய்து விற்பார்கள். அதுதான் 'புதுச்சேரிப் பொம்மை' என்று பிரசித்திபெற்று, ஊரூராக விற்பனை செய்யப்படுகிறது. அய்யரும் தந்தையாரும் அங்குள்ள பொம்மை செய்வோரில், கெட்டிக்காரர்களின் வீடுகளுக்குச் சென்று பொம்மைகளைப் பார்வையிட்டார்கள். பிரெஞ்சு இந்திய மக்கள் மிக்க நல்லவர்கள். தந்தையாரையும் அய்யரையும், கண்டவுடன் எல்லா வீடுகளுக்கும் அவர்களை அழைத்துச் சென்று, தங்கள் கை வேலைத் திறத்தைக் காண்பித்தார்கள். கலைப்பித்தர்களான இருவரும் மிக மகிழ்ந்து, "மற்றொரு முறை வருகிறோம். வந்து எங்களுக்கு என்ன விதமான பொம்மை செய்ய வேண்டும் என்பதைக் கூறுகிறோம்" என்று சொல்லிவிட்டு வந்தனர். பின்பு இன்னொரு தடவை என்னையும் அவர்களுடன் அழைத்துச் சென்றார்கள். அந்த நாளில் பொம்மைகள் கீழ்க்கண்ட மாதிரி செய்வார்கள். ராஜா, ராணி, சிப்பாய் அவன் மனைவி, பிராமணன், பிராமணத்தி, குடமெடுத்தப் பெண், கிருஷ்ணன், தவழ்ந்த கிருஷ்ணன், பழந்தின்னும் கிருஷ்ணன், மாடு, மான், புலி, கிளி, கோழி, அன்னம், பழங்கள், காய்கறி, இவைகள் எல்லாம் அழகாகச் செய்வார்கள்.

அய்யர் பிரான்சிலுள்ள தம் நண்பர் ஒருவருக்கு அனுப்புவதற்காக என்ன மாதிரியான பொம்மை செய்யச்

'சொல்லா மென்று தந்தையாரிடம் யோசனை கேட்டார். தந்தை கூறினார்:— ரவிவர்மன் ஒரு கலா ரசிகன். புராணங்களை மனத்தி லிருத்தி, அந்தச் சம்பவங்களைத் தன் ஓவியங்களில் தீட்டி இருக்கிறான். அவனது ஓவியங்கள் நமக்கு ராமனையும், கிருஷ்ணனையும், சீதையையும், மண்டோதரியையும், பரமசிவனையும், சகுந்தலையையும், அவள் ஆசிரமத்தையும், பாற்கடலில் தோன்றிய மகாலக்ஷ்மியையும், பளிங்கின் மேல் வீற்றிருக்கும் சரஸ்வதியையும், அலைகடலில் ஜோதி பணமுடி ஆயிரம் படைத்த தொல்லறிவென்னும் பாம்பின் மேல் பள்ளிகொண்ட பரந்தாமனையும், விடா முயற்சியினால் எந்தக் காரியத்தையும் சாதிக்கலாம் என் உண்மையை உணர்த்தும் கதையாகிய பகீரதன் கங்கை கொண்டுவருவதையும் நம் கண்ணுக்கெதிரே காணும் படி ஓவியங்கள் வரைந்திருக்கிறான். அந்த ஓவியங்கள் படிப்பில்லாப் பாமரரும், புராண இதிகாசங்களை உணரும் வண்ணம் ஆக்கியுள்ளான்.

பிரான்சுக்கு நீர் அனுப்பும் பொம்மையைப் பார்த்தோர் வியக்கும் வண்ணம், பாரத நாட்டில் ஆதிகாலத்துச் சிற்பத்தை விளக்கும் வண்ணம் செய்ய வேண்டும்.

அய்யர் :— பாரதி ! இத்தனை சொன்ன தாங்களே என்ன பொம்மை செய்ய வேண்டும் என்பதைக் கூறுங்கள்.

தந்தை:— சரி. என்றார்.

அய்யர்:— பொம்மை வேலைக்காரரைத் தந்தையாரில் அமர்ந்து குறித்துக்கொள்ளச் சொன்னார். அவரும் குருவிடம் உபதேசம் கேட்கும் சிஷ்யனைப்போல் உட்கார்ந்து கேட்கலானார்.

தந்தை :—குயவனாரே கேளும் ! நீங்கள் பிரமனின் சந்ததிகள் எனவும் அவர் சிரித்து "ஸ்வாமி அடியேன் இடைமறித்துக் கேட்பதற்கு மன்னிக்க வேண்டும். பிராமணர்கள்தான் பிரம்மாவின் சந்ததிகள் என்று கூறக் கேட்

டிருக்கிறேன். தாங்கள் எளியோர்களாகிய, எங்களைப் படிப்பில்லாத மண் சட்டிபானையையும், விளையாட்டுப் பொம்மைகளையும் செய்து வயிறு பிழைக்கும் எங்களை—பிரம்மாவின் சந்ததிகள் என்கிறீர்களே !

அய்யர் [சிரித்து] ஐயா ! எதற்கெடுத்தாலும் இந்தச் சாதிச் சச்சரவு சேருகிறதே ! குயவனுரே ! நீர் இந்தப் பிரசினையை இப்போது கிளப்பாதேயும். பின்னுல் பார்த்துக்கொள்ளலாம். முதலில் பொம்மை என்ன விதம் என்பதைக் கவனியும்.

தந்தை :-- அய்யரே ! நாம் இந்தப் பிரசினையை அடிக்கடி கேட்டிருக்கிறோம். அவருக்குப் புதியதாய் இருக்கலாம். முதலில் அவர் சந்தேகத்தைத் தீர்ப்போம். இல்லாவிட்டால் அவருக்கு நாம் சொல்லும் பொம்மை மாதிரி மனதில் ஏருது ; என்று சொல்லிவிட்டு " நண்பரே ! நீர் கேட்டது நன்று. பிரமன் என்னும் குயவன் பஞ்ச பூதங்கள் அதாவது மண், காற்று, நீர், வான், தீ, முதலிய பொருள்களை எடுத்து, அதற்கு உயிரும், உருவமும் கொடுத்து மனிதரை சிருஷ்டி செய்கிருன். சிருஷ்டி யற்புதமானது. தான் சிருஷ்டித்த பொருள்களை - அவைகளின் நிகழ்ச்சியைக் கண்டு ஆனந்தித்து, துஷ்ட மக்களைத் தண்டித்து, நல்லவர்களைப் பரிபாலித்துப் பின்பு யுக முடிவில் அவர்களைச் சம்ஹாரம் செய்யும் ருத்திரனுக மாறி, எல்லோரையும் விழுங்கிப் பின் ஆனந்தக் கூத்தாடி, தனியே மோன வெளியில் முயங்கி, மறுபடியும் பிரமனுக சிருஷ்டிக்கு ஆரம்பம் செய்கிருன் என்று புராணங்கள் இதிகாசங்கள் கூறுகின்றன. பிராம்மணர்கள் பிரமன் வதுததோன்றல் என்று கூறுவதன் காரணம், உலகத்தில் அறிவுப் பயிரை வளர்த்து, மக்களை உய்ப்பித்து வருந் தொழிலை ஆதிகாலத்தில் பார்ப்பனர்கள் மேற்கொண்டிருந்தார்கள். உயிரில்லாத சரீரம் எப்படிப் பிரயோசனமில்லையோ, அதுபோல் அறிவில்லாதமனிதனும் பயன்பட

மாட்டான். உயிர், அறிவு இரண்டும் மனிதனுக்கு அவசியம் வேண்டும். பிரமன் உயிர் கொடுத்தவுடன், பிராமணர்கள் கல்வி கொடுப்பார்கள். பின்பு வாழ்க்கையை மனிதன் நடத்த ஆரம்பிப்பான். அறிவுக்கு எல்லாப் பொருள்களைவிட உயர்ந்த ஸ்தானம் இருப்பதனால், அதை யளிக்கும் கல்வியைப் பார்ப்பனர் பெற்றிருந்ததனால், மற்றோர் பார்ப்பாரிடமிருந்தே கல்வி பெறுவதனால், பார்ப்பாரைப் பிரம்மாவின் தோன்றல்கள் என்று, மற்ற வருணத்தவர் போற்றி வந்தனர். பிராமணர்கள் என்றால் தபசிகள், தனக்கென வாழாதவர்கள் என்று அர்த்தம். இனி, குயவர்கள் தன் கைத்திறத்தினால் களிமண்ணுக்கு ரூபம் கொடுத்து ஒரு கலையை சிருஷ்டித்துவிடுவதனால் பிரம்மனின் சந்ததிகள் என்று சொன்னேன். இதைப்பற்றி இன்னொரு நாள் சாவகாசமாகப் பேசுவோம். இப்போது பொம்மையின் விஷயம் கவனிப்போம். வசந்த காலத்தை சிருஷ்டி செய்ய வேண்டும். இதைக் கேட்டு குயவனார் திடுக்கிட்டுப் போனார். "ஸ்வாமி! எனக்குப் புரியவில்லை. நான் செய்துகொடுக்கும் பொம்மை தங்களுக்குத் திருப்தி யளிக்காதோ என்று பயப்படுகிறேன். வசந்த காலம் எப்படிச் செய்வது?" தந்தை நகைத்து, "பயப்பட வேண்டாம்! அவசரப்பட வேண்டியதில்லை. பொம்மை அந்நிய நாட்டுக்காகச்செய்யப்படுவது. அதனால் நிதானமாகஉமக்கு எத்தனை நாள் அவகாசம் வேண்டுமோ எடுத்துக்கொண்டு செய்யும். வசந்தகாலத்தைச் சித்தரித்திருக்கும் ரவி வர்மாவின் படத்தை வேண்டுமானால் அனுப்புகிறோம். பார்த்துக் கொள்ளும். முதலில் நான் சொல்லும் விஷயத்தைப் பதித்துக்கொள்ளும்: 'மலர்கள் பூத்துக் குலுங்கும் செடிகள்! புதிய கொடிகள்விட்டுத் தழைத்த லதா கிருஹங்கள், பிறர் சோகத்தையும் தாபத்தையும் தீர்க்கும் மரங்கள், மலர்ந்த தாமரையுடன் தடாகம். அதில் மிதக்கும் அன்னங்கள். மிரண்டு ஓடும் மான்கள், ரீங்காரம் செய்யும்

வண்டுகள். இவை நிறைந்த ஒரு உத்தியான வனம். அதில் ஒரு தேவ கன்னிகை உலகை மறந்து, இன்ப வெறியுடன் ஒரு ஊஞ்சல்மீதில் ஆட வேண்டும். பின்னே யிருந்தொரு தோழி அந்த ஊஞ்சல் பலகையை ஆட்டிவிட வேண்டும். தேவ கன்னிகையின் புடவை வெண்மை நிறங்கொண்டதா யிருக்க வேண்டும்.''

குயவனார்:—ஸ்வாமி! வெள்ளை என்றால் பால் நிறமா?

தந்தை :—அன்று. ஸ்படிகம் போன்ற வெண்மை. முகத்தில் சந்திரனொளி வீச வேண்டும். கண்களில் அன்பும், கருணையும், மகிழ்ச்சியும், மிளிர வேண்டும். ரவிக்கை ஜாக்கெட் மாதிரி வேண்டாம். ரவிக்கை மாதிரி போதும். கழுத்தில் ஒரு முத்தாரமும், காதில் ஒரு அணியும், போதும். கைக்குக் கங்கணம் போடும். ஊஞ்சலாட்டும் வேகத்தில் அவள் குழல் அவிழ்ந்து தொங்க வேண்டும். சேலைத் தலைப்பும், காற்றில் பறக்க வேண்டும். அவள் கூந்தல் மிகவும் அடர்த்தியாயும் நீண்டும் இருக்க வேண்டும்.

குயவனார் [பயத்தோடு]:—கூடுமானவரை கஷ்டப்பட்டுச் செய்கிறேன். நீங்கள் அடிக்கடி வந்து பார்த்துப் போக வேண்டும்.

தந்தை :—அவ்விதமே செய்கிறோம். போய் வருகிறோமப்பா என்று கூறி வீடு திரும்பினார்.

உ

பொம்மை வேலை முடிந்துவிட்டதென்று குசப்பாளையத்திலிருந்து சமாசாரம் கிடைத்ததும், எல்லோரும் அதைப் பார்வையிடப் புறப்பட்டோம். ஒரு பெரிய முற்றத்தில் பொம்மைகளை ஒழுங்காகப் பரப்பினார் குயவனார். தந்தையார் கூறியபடியே பொம்மைகள் மிக அழகாகச் செய்யப் பட்டிருந்தன. ரத்னக் கம்பளம் விரித்ததைப்போல் பசும்

புற்றரை, தாமரைக் குளம், ஊஞ்சலாடும் பெண், தோழி எல்லாம் வெகு திறமையுடன் செய்திருந்தார் குயவனார். எல்லாவற்றையும் பார்வையிட்டபின் அவைகளைப்பற்றிய அபிப்பிராயங்களைக் கூற ஆரம்பித்தார்கள். என் அபிப்பிராயத்தைத் தெரிவிக்கும்படி கேட்டார்கள். நான் சொன்னேன் : "எல்லாம் நன்றாய்த்தானிருக்கிறது. ஆனால், ஊர்வசியின் உருவம் மட்டும் சிறிது மாறியிருக்கிறது. தந்தையார் வர்ணித்த தேவ கன்னிகை நல்ல உயரம் வாய்ந்தவளா யிருக்க வேண்டும். இப்போது செய்திருக்கும் பொம்மைக்கு உயரம் போதாது. சற்று 'கட்டுக் குட்டென்று' இருக்கிறது. மற்றதெல்லாம் அநேகமாய்ச் சரிதான்" என்றேன். தந்தையும், அய்யரும் இதைக் கேட்டு மிக மகிழ்ந்தார்கள். இந்தச் சிறு வயதிலேயே, ரசிக உணர்ச்சி, தராதரம் தெரிவது, குழந்தையின் கெட்டிக்காரத்தனத்தைக் காண்பிக்கிறதென்று. பின்பு அங்கு வந்திருந்த சிற்ப வேலைக்காரர்கள் எல்லாரும் தந்தையாரைச் சூழ்ந்துகொண்டு, "ஸ்வாமி! இப்போது எங்கள் வியாபாரம் படுத்துப்போச்சு. காரணந் தெரியவில்லை. என்ன செய்தால் வியாபாரம் வலுக்கும்?" என்று கேட்டார்கள்.

தந்தையார் :—கேளுங்கள் சகோதரர்களே! தொழில் எந்தக் காலத்திலும் சிறப்புடையது. ஆனால், காலத்தின் போக்கை அனுசரித்துச் செய்தால் நல்ல பயன் பெறலாம். பழைய காலத்து ஜனங்களுக்கேற்றபடி பொம்மை செய்தால் இக் காலத்தவர்களுக்கு ரசிக்காது. பார்வதி, பரமசிவன், கிருஷ்ணன், ராமன், விநாயகர் எல்லாம் அக்கால மக்களுக்குத் திருப்தி யளித்திருக்கலாம். இந்தக் காலத்தில் நிமிஷத்திற்கு ஒரு நாகரிகம் வருகிறது. மக்கள் மனம் எதிலும் புதுமையை நாடுகிறது. நமது வாழ்க்கைச் சித்திரமாகவே பொம்மைகளை அமைக்க வேண்டும்.

குயவனூர் :—ஸ்வாமி! எனக்குத் தாங்கள் சொல்வது இன்னதென்று விளங்கவில்லை. வாழ்க்கையை எப்படிச் சித்தரிப்பது?

தந்தை :—இதோ பாரும் பள்ளிக்கூடம். அவற்றில் படிக்கும் பிள்ளைகள், உபாத்தியாயர்கள், பெஞ்சுகள், நாற்காலி, போர்டு, விளையாடுமிடம் இவை சேர்ந்தது. உமக்கு நன்றாகத் தெரிய வேண்டுமானால், அருகிலுள்ள பள்ளிக்கூடத்திற்குச் சென்று பார்த்துக்கொள்ளலாம். கிணற்றங்கரை, ஏற்றம் இறைத்தல், வாசகசாலை, கன்னி மாடம், கடற்கரை, மோட்டார், ஆகாச விமானம் என்று புதிய பொருள்களாகச் செய்து விற்க வேண்டும். பழைய கதைகளைப் புது முறையில் சித்தரித்தாலும் ஜனங்கள் மனத்தைக் கவரலாம். இதயத்தை இழுக்கும் சக்தி புதுமைக்கு உண்டு. இப்போதுதான் நாட்டில் ஆராய்ச்சிகளும், கலை நுட்பங்களும் ஜனங்கள் உணர ஆரம்பித்திருக்கிறார்கள். இனிமேல்தான் உங்கள் தொழிலுக்கு நல்ல காலம். நீங்கள் இப்போது லாபம் கிடைக்கவில்லையென்பதற்காக உங்கள் தொழிலில் அசிரத்தை காண்பிக்கக் கூடாது. சோம்பல் மனிதனைப் படுகுழியில் தள்ளிவிடும். அதனால் மனதில் உற்சாகத்தோடு புதிய புதிய பொம்மைகள் செய்து விற்க ஏற்பாடு செய்யுங்கள் என்றார். இதைக் கேட்டு அங்குள்ள தொழிலாளர் யாவரும் சந்தோஷங்கொண்டனர். பின்பு ஸ்ரீ. வ. வே. சு. அய்யர், திருவள்ளுவர், கம்பர், பாரதமாதா முதலிய பொம்மைகள் செய்யச் சொல்லி, அச்சாரம் கொடுத்துவிட்டு ஊர் திரும்பினோம்.

# காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்

பத்திரிகைகளில் எல்லா விஷயங்களும் வெளியாகின்றன - வியாபாரம், கைத்தொழில், கல்வி, கலை, விஞ்ஞானம் எல்லாம் பத்திரிகைகளில் இடம் பெற்றிருக்கின்றன. பாரதியார் வியாபாரம், விவசாயம் முதலிய தொழில் செய்தவரன்று. ஆயினும், அறிவென்னுந் தராசைக் கொண்டு உலக வாழ்க்கையின் விதிகளை, நியமங்களையும், செயல்களையும் நிறுத்துப் பார்த்துக்கொண்டேயிருப்பார். நம் நாட்டு வியாபாரம் கீழ்நோக்கிச் சென்றுகொண் டிருப்பதை எண்ணிப் பெருமூச்செறிவார். தெய்விக ஆராய்ச்சி செய்வதையே தொழிலாகக் கொண்டு அதற்குத் துணையாக தேசத்தொண்டு செய்வது என்ற நியமம் கொண்டிருந்தார். அவர் வியாபாரிகளுக்குச் சொன்ன புத்திமதி மிகச் சிறந்ததாகும்! எந்தக் காரியம் செய்யப் புகுந்தாலும் ஆரம்பத்தில் மிகவும் குழப்பம் ஏற்படும். நாலு வழி தோன்றினால், எதன்படி நடந்தால் சரியாகும் என்று தீர்மானிக்க முடியாது. மனிதனுக்கு சந்தேகம் பெரிய சத்ரு. எந்த வியாபாரத்திற்குப் போனாலும் இந்நாளில் போட்டி அதிகம். கடலைச் சுண்டல் முதல், ரேடியோ வியாபாரம்வரை போட்டிதான். அந்நிய நாட்டு வியாபாரத்தையோ இனி நம்புவதற்கில்லை. லாபாலாபங்களை யோசித்து ஒரு வழியில் இறங்க வேண்டும் என்று எண்ணி ஆராய்வதிலேயே, சிலர் வாழ்நாள் முழுதும் கழித்துவிடுகிறார்கள். யோசனை செய்ய வேண்டியது அவசியந்தான். வியாபாரத்திற்கு மட்டும் இந்தக் கஷ்டமில்லை. ஆனால், ஒரு தீர்மானத்துக்கு வருவதும் அவசியம் தான். எல்லா விஷயங்களுக்கும் இதுபோன்ற சங்கடங்

கள் இருக்கின்றன. இந்தப் போராட்டத்தில் மனிதன் வெற்றி பெற வேண்டும். பல தடவை தோல்வி ஏற்படலாம். மதி பெரிதா விதி பெரிதா என்ற கேள்வியும் எல்லோர் மனத்திலும் எழுகிறது. ஒருவன் அதிகப் புத்திசாலித்தனமாக நடந்துவந்தாலும் அவனுக்குக் கடைசியில் கஷ்டந்தான் வருகிறது. இன்னொருவன் முழு முட்டாள். அவன் தொட்ட தெல்லாம் பொன்னாய் மாறுகிறது. இதற்கு என்ன காரணம் சொல்கிறது? அதிர்ஷ்டம் என்பதுதான் காரணமா? என்றெல்லாம் ஒரு நாள், நாங்கள், எனது நண்பர்கள் எல்லோருமாகத் தர்க்கித்துக் கொண் டிருந்தோம். தந்தையார் பொருமையோடு கேட்டுக்கொண் டிருந்துவிட்டுச் சொன்னதாவது :

" குழந்தைகளே, சகோதரர்களே, நீங்கள் யோசிப்பது சரியான காரியம்தான். கஷ்டங்கள் வரத்தான் செய்யும். நல்லதுங் கெட்டதும் மாறிமாறி நடைபெறுவது தான் உலக இயல்பு. நஷ்டம் வரும் என்பதற்காக வியாபாரத்தை விட முடியாது. தொழிலின்றிச்சும்மாயிருப்பது மனித ஜன்மத்திற்குச் சாத்தியமில்லை. இதற்கு ஒரு உதாரணம் சொல்லுகிறேன். கஷ்டம் வந்த சமயம் அதிலேயே மாய்ந்துவிடாமல் கூடுமானவரையில் புத்திசாலித்தனமாக நடக்க வேண்டியது நம் கடமை. செய்கைதான் நாம் செய்ய வேண்டும். அதிலேற்படும் பயன் கடவுளைச் சார்ந்தது." கதையைச் சொல்லுங்கள் என்று துரிதப்படுத்தினோம். அப்பா ஆரம்பித்தார் :

"ஒரு ஊரில் பரம லோபியான ஒரு செட்டியார் இருந்தார். எச்சிற் கையினுல் காக்கையை ஓட்ட மாட்டர். தருமம் செய்வது என்பதைக் கனவிலும் நினைக்க மாட்டார். பொருள் சேர்க்க வேண்டும் என்ற ஒரே எண்ணந்தான் அவருக்கு உண்டு. ஒரு நாள் அந்தச் செட்டியார் வீட்டுப் பசுமாடு ஒன்று ஆகாரம் போடாததனுல் எழுந்திருக்கவும் சக்தியற்றுப்போய்க் கிடந்தது. பசுவுக்கு, கறவையுள்ள

வரைதான் தீனி போடுவார். கறவை நின்றால் தீனியும் கிடையாது. அவருக்குக் குழந்தைகள் கிடையாது. மனைவி மட்டும் உண்டு. அவள் செட்டியாரைப் பார்த்து, "நீங்கள் மனதார ஒரு தர்மமும் செய்வதில்லை. இப்படியே இருந்தால் நாளைக்கு இறந்தபின் நரகத்தில்தானே கிடந்து உழல வேண்டும். இந்தப் பசுமாட்டை யாரேனும் பிராமணனுக்குத் தானம் செய்துவிடுங்கள். மாட்டைப் பட்டினி போட்டுக் கொன்ற பாவம் நம்மைச் சேராது" என்றாள். செட்டி புத்திசாலி "அவள் சொல்லுவதும் வாஸ்தவந் தான். பசுவுக்குத் தீனி வைப்பது லாபம்; கோதான புண்யமும் கிட்டும். ஒன்றில் இரண்டு லாபம்" என்றெண்ணி, "யாருக்குத் தானஞ் செய்வது?" என்று யோசித்துக் கொண்டிருந்தான். அந்த சமயத்தில் வாயிலில் உபாதானம் எடுத்துக்கொண்டிருந்தான் ஒரு பார்ப்பான். அவனைக் கூப்பிட்டு "ஐயரே, ஒரு பசுமாடு இருக்கிறது. அதைத் தானம் செய்யலாமென்றிருக்கிறேன். வாங்கிக்கொள்கிறீரா?" என்று கேட்டான். பிராமணன் சந்தோஷத்தோடு ஆகட்டும் என்றான். அவன் இன்றோடு வீட்டில் பால், தயிர் கஷ்டம் நீங்கும். ஸௌக்கியமாயிருக்கலாம் என்று பூரித்தான். உண்மையில் மாடு இருந்த ஸ்திதி அவனுக்குத் தெரியாது. உடனே செட்டி, பிராமணனை மந்திரத்தைச் சொல்லச் சொல்லி, அவன் கையில் தாரை வார்த்தான். பிராமணன் செட்டியாரைப் பார்த்து "பசுவெங்கே" என்று கேட்டான். "கொல்லைப் புறத்திலிருக்கிறது; வாரும்" என்றழைத்துச் சென்றார் செட்டியார். பிராமணன் மாட்டைக் கண்டு மலைத்தான். பின்பு செட்டியும் மனைவியும் பின்னால் பிடித்துத் தள்ள, பிராமணன் கழுத்துத் தும்பைப் பிடித்திழுக்க, மாடு வாயிற்புரம் வந்ததும் நடந்த ஆயாசத்தினால் கீழே விழுந்து இறந்தது. இறந்த மாட்டை எடுத்துச் செல்வதற்குச் சக்கிலியனுக்கு கால் ரூபாய் பிராமணன் உபதானச் செம்பை அடகு வைத்துக்

கொடுத்தான். பின்பு சிறிது நாளைக்கெல்லாம் செட்டி இறந்து போனான். எம தூதர் அவனை யம சந்நிதானத்திற்கு இழுத்துச் சென்றனர். யமன் செட்டியைப் பார்த்து "அடே, வாழ்நாள் முழுவதையும் பாபத்தைச் செய்துவிட்டு கிழ மாட்டைக் கோதானம் செய்தாய். பாபத்திற்காக, மீளா நரகமும், தானத்திற்காக மூனே முக்கால் நாழிகை ஸ்வர்க்கமும் உண்டு" என்றான். அதைக் கேட்ட செட்டி "ஐயா, வெகுகாலம் நரகத்தில் கிடந்துவிட்டு ஒரு துளி சுகம் அநுபவிப்பதைக் காட்டிலும், முதலில் சுகத்தை அநுபவித்து விட்டுப் பின்பு நரகம் செல்கிறேன்" என்றான். யமன் "ஐயோ பாவம்" என்று நினைத்து, சரி என்றான். தூதர் செட்டியை ஸ்வர்க்கத்திற்கு அழைத்துச் சென்றனர். காமதேனுவைக் கண்டதும் செட்டி அதன் முதுகிலேறிக் கொண்டு "காமதேனுவே! இந்த யமன் ரொம்ப துஷ்டன். அவனை முட்டு" என்றான். அதிகப் புண்ணியம் செய்தபடியால் ஸ்வர்கவாசம் செய்ய வந்திருக்கிறான். அவன் சொல்லுவதை நாம் தட்டலாகாது என்று நினைத்து, காமதேனு ஓடோடியும் சென்று யமனை முட்டவாரம்பித்தது. யமன் ஒன்றும் புரியாமல் அலறிக்கொண்டு பிரம்மதேவனிடம் ஓடினான். செட்டி துணிவோடு, "பிரம்மாவுக்கும் அதுதான் செய்" என்றான். பிரம்மாவும், யமனும் சேர்ந்து, விஷ்ணு உலகம் சென்றனர். அங்கு திருமாலுக்கும் அதே தண்டனை தான் கிடைத்தது. எல்லோருமாகச் சேர்ந்து, பரமசிவனிடம் சென்று, இந்த அநியாயத்தை முறையிட்டார்கள். இதற்குள்ளாகச் செட்டி காமதேனுவில் சவாரி செய்தவாறே, கைசால கிரியை மும்முறை வலம் வந்து நேரே மகாதேவரிடம் வந்துசேர்ந்தான். இதற்குள் மூன்றே முக்கால் நாழிகையும் ஆகிவிட்டது. யமன் மகா கோபததோடு நடந்த விஷயத்தைப் பரமசிவனிடம் சொல்லவும், அதைக் கேட்டு அங்கிருந்த பூத கணங்கள், தேவர்கள், ரிஷிகள், நந்தி, யாவரும் குலுங்கச் சிரித்தனர்

யமன் செட்டியை நரகத்துக்கு வரச் சொல்லி மடியைப் பிடித்து இழுத்தான். செட்டி, பரமசிவனை அடிபணிந்து, 'ஸ்வாமி முப்பத்து முக்கோடி தேவர்களும், நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகளும் மும்மூர்த்திகளும் ஒன்று சேர்ந்து வீற்றிருக்கும் கைலாசப் பருவதத்தை நான் பக்தியோடு பிரதக்ஷிண நமஸ்காரம் செய்த பின்பும், என்னிடம் பாபம் மிஞ்சி நிற்குமா? யமன் சொல்லுவது நியாய விரோதமல்லவா?" என்றான். இந்த வார்த்தைகளைக் கேட்டு யமன் அசட்டு விழி விழித்தான். மகாதேவன் புன்னகையோடு யமனைச் சமாதானஞ்செய்து அனுப்பிவிட்டுச் செட்டியைத் தன்னுடைய சமீபத்திலேயே வைத்துக்கொண்டார். இந்தக் கதையை எதற்குச் சொன்னேனென்றால் செட்டி தனக்குக் கிடைத்த ஸ்வல்ப நேரத்தையும் எப்படி உபயோகித்துக்கொண்டான் என்று காட்டுவதற்காகத்தான். எல்லோருக்கும் இன்ப துன்பங்கள் மாறிமாறி வரும். அவ்வப்பொழுதே, அததற்கேற்றவாறு நடந்து கொண்டால், கஷ்டம் விலகிப்போகும்.



# கண்ணன் குழலோசை

ஓர் நாள் என் தந்தையார் மாலையில் ஏதோ யோசனை யில் ஆழ்ந்திருந்தார். பாவலர்க்குத் தோன்றும் பகற்கனவு கண்டுகொண் டிருந்தார். அவர் யோசனை செய்யும் போதோ, அல்லது கவலையா யிருக்கும்போதோ, நாங்கள் அருகில் செல்ல மாட்டோம். ஏனெனில் அவருக்கு முன் கோபம் அதிகம். எதைப்பற்றி யோசிக்கிறாரோ என்று நானும் சற்றுத் தூரத்திலிருந்து கவனித்துக்கொண் டிருந் தேன். நாற்காலியில் சாய்ந்தவாறே, கண்ணயர்ந்தார். திடீரென்று ஏதோ முணுமுணுத்தார். நான் சற்று நாற் காலிக்குப் பின்புறமாக உட்கார்ந்து அவர் பேசுவதைக் கவனிக்கத் தொடங்கினேன். உடனே பாட ஆரம்பித் தார் :

எங்கிருந்து வருகுவதோ ? ஒலி
யாவர் செய்குவதோ ? அடி, தோழி !

குன்றினின்று வருகுவதோ ? மரக்
கொம்பினின்று வருகுவதோ ?

என் மனம் இதைக் கேட்டதும் உருகிவிட்டது. கண்ணன் குழலோசையைக் கேட்டு அனுபவிக்கிறார். நானும் பார்க் கிறேன், என்காதுக்கு ஒரு ஓசையும் கேட்கவில்லை. கவியின் காதுகளுக்கு மட்டும் கேட்கிறது என்று யோசிக்குமுன்பே தந்தை கண்விழித்தார். சுற்றுமுற்றும் பார்த்தார். " தங்கம்மா ! எப்பொழுது இங்கு வந்தாய் ?" என்றார். நான் பயத்துடன் "சற்று முன்னால் " என்றேன். "அப்படி யானால் நான் பேசியதைக் கேட்டிருப்பாயே " என்றார். ' பேச்சு சரியாய் விளங்கவில்லை. பாட்டு மட்டுங் கேட்

டேன்" என்றேன். "பாட்டைச் சொல்லு" என்றார். நான் மேலே எழுதிய வரிகளைக் கூறினேன். அதைக் கேட்டதும் அவர் உடல் புளகாங்கித மடைந்தார். "அம்மா! நான் என்ன வென்று கூறுவேன்? அந்த ஒலியின் இன்பத்தை, அமுது பொங்கித் ததும்பும் கீதத்தை, நான் கள்ளால் மயங்குவதுபோலே, செவிகளால் கேட்டு மயங்கினேன். நீயும் மனத்தினால் உணர்ந்தா யென்று எண்ணுகிறேன். என் காது கேட்டது. உன் உள்ளம் உணர்ந்தது" என்றார். "அப்பா நீங்கள் சொல்லுவது சரியில்லை. கண்ணன் பாட்டை நான் காதாரக் கேட்கும் பாக்கியம் பெறவில்லை. தாங்கள் கேட்டு அனுபவிக்கும் காட்சியை மட்டுந்தான் கண்ணால் பார்த்தேன். அதனால் என் மனம் பூரண திருப்தி யடையவில்லை" என்றேன். தந்தையார் கலகலவெனச் சிரித்தார். சிரிப்புச் சத்தம் கேட்டதும் தாயார் வந்து என்ன வென்று விசாரித்தார். தந்தை: "எனக்குக் கண்ணனின் புல்லாங்குழல் ஒலி சிறிது செவிக்கெட்டிற்று. அதை, அந்த ஆனந்தத்தை வாய் வெளிவிட்டது. நம் தங்கம்மாளுக்கு அது கேட்கவில்லை. பெரிய ரிஷிக் கிழவி. நம்பிரான் கண்ணன் வேய்ங்குழலின்பம் கேட்கவில்லை என்று வருந்துகிறாள்" என்றார். தாயார், "அது எல்லோரும் கேட்க முடியுமா? குழந்தைகளுக்கு வேதாந்தம் அர்த்தமாகுமா? நன்றாயிருக்கிறது. உங்கள் பேரில்தான் குற்றம். தான் எப்போதும் தனிமையில் ரஸிப்பது காணாதென்று, குழந்தைகளையும் இப்படிப் பழக்கினால் வீட்டு வேலைகள் ஆகும் வழி என்ன? சோம்பேறித்தனம் வளருவதுதான் கண்ட பலன்" என்றார். தந்தையார் இன்னும் உறக்கச் சிரித்து,

"மண்ணை யிருந்து துழாவி
வாமனன் மண்ணிது வென்னும்
பெண்ணைப் பெருமயல் செய்தார்க்
கென்செய்கேன் பெய்வளையீரே"

என்று பாடினார். பின்பு தாயார் என்னிடம் "மனோவாக்குக் கெட்டாத பரம்பொருளைத் தரிசிப்பதும், பேசுவதும் சாமான்ய விஷயமா? கொஞ்சம் நமக்குப் பூர்வபுண்ணியம் இருந்ததனால்த்தான் அப்பாகூட இருக்கும் பாக்கியமாவது கிடைத்திருக்கிறது. மனம் எவ்வளவோ பக்குவமடைந்த ஞானிகளுக்குக்கூட, பகவத்தரிசனம் கிட்டுவதில்லை" என்று சொல்லுவதைக் கேட்டுத் தந்தையார், "அப்படியில்லை. யாராலும் பிரிவுணர்ச்சியை நீக்கினால், எல்லோரும் ஒன்று என்று ஸம திருஷ்டியோடு பார்த்தோமானால், 'ஸர்வம் விஷ்ணு மயம்' என்னும் உண்மையைக் காணலாம். கடவுளைப் பார்ப்பதற்கு ஆண், பெண், குழந்தை, பெரியவர் என்னும் வித்தியாசம் ஒன்றும் கிடையாது" என்றார். பின்பு அம்மாவைப் பார்த்துத் "தற்புகழ்ச்சி செய்யாதே மூடநெஞ்சே" என்றார். தாயார்: "என்ன தற்புகழ்ச்சி செய்தேன்?" "புகழவில்லையா உன் கணவனைப்பற்றி" "உண்மையைத்தானே சொன்னேன்? இதனால் என்ன கெடுதல் உண்டாகும்?" "பாரதத்தில் தற்புகழ்ச்சி தற்கொலைக்குச் சமானம் என்று எழுதியிருப்பதை வாசித்ததில்லையா?" நான், "அப்பா அது என்ன கதை?" என்றேன். தந்தைகூறலானார்: "பாரதப்போர் மும்முரமாய்நடக்கிறது. கர்ணனை ஒருவரும் வெல்ல முடியவில்லை. தருமர் யுத்தத்தில் கர்ணனால் முறியடிக்கப்பட்டு, சோர்வுற்று, மனம் வருந்தி, பாசறையில் தனியே உட்கார்ந்திருந்தார். நகுலனும், சகாதேவனும் கர்ணனுடன் போர்புரிந்து, அவனை வெல்ல மாட்டாமல் திகைத்து நிற்கும் அர்ஜுனனிடம் சென்று "அர்ஜுனா! நமது அண்ணா தர்மராஜர் கர்ணன்கூட யுத்தஞ்செய்து வெகுநேரம் போராடிக் கடைசியில் அவன் விட்ட அஸ்திரத்தினால் மெய் தளர்ந்து, அங்கம் நொந்து, சித்தங் கலங்கித் தடுமாறிப் புறமுதுகிட்டுப் பாசறைக்குச் சென்றார். நாங்கள் அவரை அங்கு கொண்டு விட்டுவிட்டு உன்னிடம் தகவல் தெரிவிக்க வந்தோம்" என்றனர். அதைக்

கேட்ட அர்ஜுனன், தீயை மிதித்தவன்போல் துடித்து, மெய் பதைத்து, என்ன காரணம்? கர்ணனை வெல்ல ஒருவராலும் முடியவில்லையே. இவன் என்ன வெல்லப்படாதவனா? என்சபதமும் வீண்போமா என்று மனம் நொந்து, நகுல சகாதேவ பீமர்களைப் பார்த்துச் "சகோதரர்களே! சற்றுநேரம் நீங்கள் கர்ணனுக்கெதிராக யுத்தஞ்செய்து கொண்டிருங்கள். நான் சென்று அண்ணனைப் பார்த்து வருகிறேன்" என்று கூறிச் சென்றான். அவனோடு கண்ணனும் சென்றான். பார்த்தனையும், சாரதியையும் கண்ட தருமர் விஜயன் விஜயத்தோடு வரவில்லை யென்று தெரிந்ததும் வெகு சினத்தோடு "அர்ஜுனா! நன்று! உன் காண்டீபமும் வெறும் சுமையாயிற்றா? உன் வீரமும் அழிந்ததோ? ஆசாரிய துரோணரிடம் 'தனுர் வித்தையில் தன்னிகரில்லை யென்று' சொல்லும்படி பயின்று, அக்நி தேவன் அழியா வில்லும், அருத நாணும், சுவேத புரவியும், இணையில்லாத் தேரும் கொடுக்க, ஆதிப் பரம்பொருள் உனக்குத் தேர் நடத்த, கற்றைச் சடைமுடி தரித்த பரமசிவன் கொடுத்த பாசுபதாஸ்திர மிருக்க, இன்னமும் கர்ணனை வதைக்காமல் திரும்ப வந்தாயே" என்று கடிந்து கொண்டார். ஏற்கெனவே கர்ணனை வெல்ல முடியாமல் மனத்தைத் துன்புறுத்திக்கொண்ட பார்த்தனுக்குத் தருமரது சொல் நாராசம் காய்ச்சி நடுச்செவியிலூற்றியது போலிருந்தது. போதாதற்குக் காண்டீபத்தை வேறு தூஷித்துவிட்டான். தன்னையோ, காண்டீபத்தையோ, அண்ணனையோ, யாராலும் தூஷித்தால் அவர்களைக் கொன்று விடுவேன் என்று முன்னமே சபதம்செய்திருந்தான். அதனால் "என் காண்டீபத்தைத் தூஷித்தவர் யாரானாலும் அதம் செய்வேன்" என்றெழுந்தான். கண்ணன் புஞ்சிரிபபோடு "என்ன வேலை செய்கிறாய் அர்ஜுனா?" எனவும் அர்ஜுனன் சபதப்படி நடக்க வேண்டும் என்றான்.

அண்ணனே, தனுஸைத் தூஷித்தார். அவரைக் கொல்லக் கூடாது. அதற்குப் பதில் என்னையே கொன்று கொள்வதுதான் முறை என்றான். கண்ணன் அன்புடன் அர்ஜுனனை நோக்கிப் "பார்த்தா! பதறாதே! பதறின காரியம் சிதறும். சமயத்தில் புத்தியைச் சிதற விட்டு விட்டாயே. உன் சபதமும வீணாகாமல், தருமருக்கும் ஹானிவராமல் ஒரு காரியம் சொல்கிறேன் கேள். நீ விரும்புவதோ தற்கொலை செய்துகொள்ள வேண்டுமென்று. தற்கொலை இழிவானது. பாபம் மிகுந்தது தற்புகழ்ச்சி. எனக்கெதிரில் தருமரிடம் உனது வீர சூர பிரதாபங்களைச் சொல். சபதம் சரியாகிவிடும்" என்று அர்ஜுனனும் அதுபோல் செய்து பின்பு, ஆக்ரோஷத்துடன் சென்று கர்ணனை வதைத்துப் பெரும் புகழ்பெற்றான். நான் இதைக் கேட்டு சந்தோஷப்பட்டேன்.



# உண்மையின் வெற்றி

என் தந்தையாருக்கு "பொய்" சொல்பவரைக் கண்டால் பிடிக்காது. உண்மை தவறி நடப்பவர்களை உதைத்து நசுக்கிவிடுவார். விளையாட்டாகக்கூட, பொய் பேசக் கூடாது என்பது எங்கள் வீட்டில் கட்டாய விதி. ஓர் நாள் இதற்கு மாருக ஒரு விஷயம் நேர்ந்தது. 'மித்திர னுக்கு' வியாசங்கள், கட்டுரைகள் எழுதியனுப்புவார். அதைத் தபாலில் சேர்க்கும் பொறுப்பு குழந்தைகளாகிய எங்களுடையது. பலவித காரணங்களுக்காக வேறு ஒரு வரிடமும் தம் கட்டுரையைக் கொடுக்கமாட்டார். புதுவை யில் சமுத்திரக் கரைக்காட்சி ரொம்ப அழகு வாய்ந்தது. ஸ்திரீகள் எல்லோரும் ஒரு கூட்டமாகவும், புருஷர்கள் எல் லோரும் ஒரு கூட்டமாகவும் தினம் கடற்கரை செல்வது வழக்கம். அன்று தந்தையாருக்கு உடம்பு சரியில்லை. ஓர் கட்டுரை எழுதிய தபாலை மட்டும் என்னிடம் கொடுத்து "இது மிகவும் முக்கியமான தபால், ஜாக்கிரதை! உடனே தபாலில் சேர்த்துவிடு" என்ருர். சரி என்றேன். பின்பு உற்சாகத்தோடுகடற்கரை சென்ரும். கடற்கரை யருகில் தான் தபாலாபீஸ் இருக்கிறது. என் சிநேகிதைகளைக் கண்டதும் எனக்குத் தபால் விஷயம் அடியோடு மறந்து விட்டது. விளையாட்டிலும் பேச்சிலும் நேரம் போனதே தெரியவில்லை. இரவு ஒன்பது மணி யிருக்கும், திரும்ப வீடு வரும்போதுதான் தபாலை வீட்டிலேயே வைத்துவிட்டு மறந்தது நினைவுக்கு வந்தது. இந்தக் கஷ்டத்திற்கு என்ன செய்வது? தந்தை மிகவும் கோபிப்பாரே! என்னடா செய்வோம் என்று பயந்தோம். பின்பு "கடிதத்தைத் தபாலில் சேர்த்ததாக அவரிடம் சொல்லிவிடுவோம்

நாளை அதிகாலையில் பத்திரிகை வாங்கத் தபாலாபீஸுக்குப் போகும்பொழுது தபாலைப் போட்டுவிடலாம்" என்று தீர்மானித்துக்கொண்டு வீட்டுக்கு வந்தோம். தந்தை கதவைத் திறந்தார். அவர் கையில், நான் போடாத கவர் வைத்திருந்தார். நான் படும் வேதனையை முகத்தைப் பார்த்துத் தெரிந்துகொண்டார். உன் அஜாக்ரதைக்கு நீ தண்டனை யடைந்தாய். இது பெரிய காரியமில்லை. எல்லாம் நன்மைக்குத்தான். நாளைக்கு அனுப்பிக்கொள்ளலாம் என்றார். எனக்கு இன்னும் கொஞ்சம் பயமும் நடுக்கமும் உண்டாயிற்று. "ஐயோ இவரிடம் பொய் சொல்லவும் எண்ணி யிருந்தோமே என்று" தந்தை இதை யறிந்து கொண்டு பாபத்துக்குப் பிராயச்சித்தம் அதை அறிந்து துயரப்படுவதே! உனக்கு ஒரு உதாரணம் சொல்கிறேன் கேள். "பாரவி என்றொரு ஸம்ஸ்கிருத கவியிருந்தான். அவன் சிறுவனா யிருக்கும்போது ரொம்ப புத்திசாலியா யிருந்தான். ஏற்ற பருவத்தில் வித்யாப்யாசம் செய்துவைக்கப்பட்டுக் கல்வி கற்று நல்ல பண்டிதனானான். நாலா திசையும் அவன் புகழ் பரவிற்று. பாரவியின் தகப்பனும் நல்ல அறிவாளி. தகப்பனைக் காட்டிலும் மகன் கீர்த்தியும், புகழும்பெற்றான்."

**நான்** :—அப்பா, நம்ம மோதிலால் நேருவும் ஜவாஹர் லால் நேருவும் போலவா?

**தந்தை** :—சபாஷ்! ஆம். அதேபோல். ஆனால், தந்தைக்கு மகன்பேரில் அளவற்ற பிரியம். மகன் எவ்விதமும் குற்றஞ் சொல்லப்படாதவனாய் விளங்க வேண்டுமே என்று கவலைப்படுவான். அதனால் பாரவியை எல்லாரும் புகழ்வதுபற்றி ஒரு புறம் சந்தோஷம், ஒரு புறம் பயமும் கொண்டான். மகன் புகழினால் கர்வம் படைத்து அதனால் சீர்குலைந்துவிடாம லிருக்க வேண்டுமே என்று, தந்தையின் கவலை. மகனுக்கு விளங்கவில்லை. மகன் முற்றியது தந்தைக்கு விளங்கவில்லை. ஒருவர் மனத்தை ஒருவர் அறியாமல்

திகைப்பும், விரோதமும்கொள்ள ஆரம்பித்தனர். மகனைக் காரணமில்லாமல் கோபிப்பான் தந்தை. மகன் நன்றாயிருக்கிறது என்பதை, தந்தை இல்லை என்பான் மகனது கவிதையிலும் ஆயிரங் குற்றங்குறை கண்டு பிடிப் பான். தந்தையின் கூற்று மகனுக்கு வெறுப்பை யுண்டாக் கிற்று. நமக்கெதிராகக் கிளம்பிய தகப்பனைக் கொன்று விட்டாலென்ன என்றுகூடத் தோன்றியது. ஒரு நாள் தந்தையைக் கொல்வதற்காக ஒரு கல்லைக் கையிலெடுத்துக் கொண்டு கட்டிலடியில் உட்கார்ந்திருந்தான் பாரவி. தாயும் தகப்பனும் தன்னைப்பற்றிப் பேசிக்கொள்வதைக் கேட்டான். அவன், தன் செய்கைக்கு வருந்தினான். இப்படி உத்தமரான தகப்பனைக் கொல்ல எண்ணிய நானல்லவா சாக வேண்டும் என்று நினைத்து, உடனே ஒளிந்திருந்த இடத்தினின்றும் வெளியே வந்து, தகப்பனிடம் உண்மை யைக் கூறி, சாக உத்திரவு கேட்டான். தந்தை விஷயம் இப்படி முற்றியதை உணர்ந்து திடுக்கிட்டு, "அப்பா! மகனே! நீ செய்த பாவம் விலகிவிட்டது. உன் மனமே உன்னைத் தீயிலிட்டு வாட்டிவிட்டது என்றான். பாரவி அதை ஒப்புக்கொள்ளமல் ஏதேனும் ஒரு தண்டனை தாங்கள் விதிக்க வேண்டும். ஆனால்தான் என் பாபம் பரி சுத்தமாகும்" என்று மன்றாடினான். தகப்பன் சிரித்து, அப்படியானால் ஆறு மாதம் உன் வேட்டகத்தில் இருந்து வா" என்று கட்டளையிட்டான். பாரவியும் அவ்விதமே சென்றான்.

நான் :—அப்பா, வேட்டகம் சென்றால் அதிலென்ன கஷ்டம்? சுகமாய் விருந்து சாப்பிட்டுக்கொண் டிருக்க லாமே என்றேன். அந்தச் சமயம் அங்கு வந்த என் தாயார் வேட்டகத்து உபசாரம் இப்படி யல்லவா நடக்கும் என்று இந்தப் பாடலைப் பாடினார். [ஒரு மாப்பிள்ளை சொல் கிறான்.]

என்னுலே முடியாது இந்த
மாமியார் வீடுபோய்
மானங்கெட்டு வர ;
அருமை வேட்டகம் போய்
அவதிப்பட்டு வர.

போஜனம் :—

போனநாள் வாழையிலே ;
இரண்டா நாள் தையலிலே ;
மூணுநாள் கையிலே ;
நாலா நாள்—†" ஏலே—போலே—"

போனதும் தங்கக் காப்பு;
இரண்டா நாள் வெள்ளிக்காப்பு;
மூன்றுநாள் செப்புக்காப்பு
நாலாநாள் ‡" பூசைக்காப்பு"

என்றல்லவா மாப்பிள்ளைக்கு உபசாரம் நடக்கும்.

நான் :—அப்படியா என்று வியப்புற்றேன்.

தந்தை :—வேட்டகம் சென்ற பாரவி கடைசியில் ஆடு மேய்க்கும் வேலையிலீடுபட்டு, காட்டில், ஆச்சரியமான கவிதைகள் எழுதினுன் என்பது கதை என்ருர். நான் "என்ன கதை எழுதினுன் ?" கிராதார்ஜுனீயம் என்பது. "அர்ஜுனனும் வேடனும்" என்று பொருள். அந்தக் கதையை இன்னொரு நாள் சொல்லுகிறேன் என்ருர் தந்தை.

---

† அடே, போடா. என்று அர்த்தம் - திருநெல்வேலி பாஷையில்.

‡ அடி என்று பொருள்.

# ஸ்திரீகளும் சமூகமும்

என் தங்கை பாப்பாவுக்குக் கதை கேட்பதில் பிரியம் அதிகம். தந்தையார் எப்போதும் ரஜபுத்ர ஸ்திரீகளின் வீர சரிதைகளைக் கூறுவார். கூறும்பொழுதே, அந்தநங்கையர் வீரயுத்தம் புரிந்து, ஸ்திரீ தர்மத்தை நிலைநாட்டுவது நம்முன் நடப்பதுபோல், அத்தனை ரஸமாய்க் கதை சொல்லுவார். ராணி லக்ஷ்மீபாய், ராணி துர்க்காவதி, பத்மினி முதலிய வடநாட்டுப் பெண்களைப்பற்றிக் கூறும்போது என் மனம் வேதனையுறும். உடனே, "அப்பா! தென்னாட்டில் அத்தகைய ஸ்திரீ ரத்னங்கள் ஒருவருமில்லையா" என்பேன். "அப்படியன்று. நம் நாட்டிலும் ராணி மங்கம்மாள், வீரதீரத்தில் சிறந்து விளங்கவில்லையா? ஔவை போன்ற பெண்மணிகள் வித்வத்திலும், கவிதையிலும் சிறந்து விளங்கவில்லையா? நீ தென்னாட்டுச் சரித்திரத்தை எடுத்துச் சரியாகக் கவனித்து வாசி. இனிமேலும் அத்தகைய ஸ்திரீ ரத்னங்கள் நம் நாட்டில் தோன்றி உலகத்து மாதருக்கு எத்தகைய ஸ்திரீ தர்மம் நடத்த வேண்டும் என்பதற்கு வழிகாட்டுவார்கள். இப்பொழுது ஸ்திரீ தர்மம் வகுத்திருப்பவர்கள் யாவரும் புருடர்கள். பிரதிதினமும் பெண்களைப்பற்றிப் பேசுகிறார்கள். ஆனால், பெண்களுடைய தேவைகளையும், அவர்களுக்குக் கொடுக்க வேண்டிய கல்வியைப்பற்றியும், பெண்கள் எத்தகைய இலட்சியத்தை யடைய ஆவலுள்ளவர்களாயிருப்பார்கள் என்பதையும் சிறிதும் அறியாமல், யோசிக்கவும் முயலாமல் இருக்கிறார்கள். தாங்கள் ஏற்படுத்திய விதியில், ஒழுங்கில் சிறிதளவேனும் பிறர் குறைகூற முடியாதென்ற இறுமாப்புடன், "மெல்லியலார்" ஆகிய ஸ்திரீகளுக்குக் கடுமையான திட்டம் வகுத்திருக்கின்றனர்.

அவர்களது மனோபாவத்தை மாற்றினாலொழிய ஸ்திரீகள் முன்னேற முடியாது. பரம்பரையாக எண்ணிவந்ததைப் போலவே இப்போதும் ஆடவர் "கேவலம் பெண் ஜன்மம் தானே, அவர்களுக்கு என்ன தெரியும்? என்ன முடியும்" என்றே நினைக்கிறார்கள். ஆனால், நீ ஒரு புருஷன்தானே, உன்னால் எங்ஙனம் ஸ்திரீகளின் இயல்பை யறிய முடியும்? என்று நீ கேட்கலாம். எனக்குப் பெண்கள் முன்னேற்றத்தில் விசேஷ சிரத்தை யிருப்பதற்குக் காரணத்தையும் கூறுகிறேன், கேள்."

இந்தக் காலத்தில் நம் மக்களுக்கு ஒரு அசட்டு மனோபாவம் இருக்கிறது. வழக்கம் என்பதற்காக எத்தகைய தவறு செய்யவும் தயாரா யிருக்கிறார்கள். அந்த அநியாயத்தைச் சகிக்க எவ்வளவோ பொறுமை வேண்டும். குழந்தைப் பருவத்தில் தகுந்த பயிற்சி யில்லாதபடியால் ஏற்பட்ட மடமைதான் இதன் காரணமாகும். இந்தச் சிறு பிசகை உடனே தவிர்க்க முயலாவிட்டால், பெரிய பிசகு ஏற்பட்டு, சமூகமே அதனால் அழிந்துவிடும். பழைய பொய்யினால் புது விழிப்பை அழிக்கிறார்கள். பழைய நன்மைகளை யெல்லாம் நாகரிக மென்னும் பெயரினால் புதுத் தீமை யழிக்கிறது. ஆண்கள் ஆண்மையிழந்து அறிவிழந்தனர். பெண்மை மடமை யிருளில் மூழ்கி, அடைப்பட்டு மயக்க முற்றது. ஸ்திரீகளின் தன்மை எது என்று அறிய முடியாமல், தங்கள் மனோபாவங்கள், மனவெழுச்சிகள், உணர்ச்சிகள் முதலிய அனைத்தையும் அடக்கிவைத்திருக்கும்படி சட்டம் ஏற்படுத்தி யிருக்கிறார்கள். அவர்கள் உண்மையை கவனிக்க இடம் கொடுப்பதில்லை. அவர்கள் அபிலாஷைகளைப் பூர்த்தி செய்ய முடியாமல் திணறுகிறார்கள். இந்தக் கட்டுப்பாட்டைச் சிறிது அலட்சியம் செய்யும் பெண் யாரானாலும், உடனே அவர்களைத் தூஷிக்கவும் புருஷர்கள் ஆரம்பித்துவிடுகின்றனர். இதற்குப் பழைய காலத்தை எடுத்துச்சொல்லி, "அந்நாளில் ஸ்திரீகள் ஆண்களுக்கு

அடங்கி நடந்து பெருமையுற்றனர்'' என்று நளாயினி கதையையும் அநுஸூயையின் சரித்திரத்தையும் எடுத்துக் காட்டுவார்கள். கற்பையும், நல்லொழுக்கத்தையும் நிலை நாட்டுவதற்காக இவர்கள் இங்ஙனம் கூறவில்லை. அநேக வருஷமாக எஜமானர்களா யிருந்து, ஸ்திரீகளை அடிமைகளாகப் பாவித்த வழக்கத்தைத் தங்களிடமிருந்து நீக்க ஸாமர்த்தியமில்லாத குறையினால்தான் இவ் வண்ணம் கூறுகிறார்கள். புதுமைப் பெண், உதய கன்னி, உலக உத்தாரணத்திற்காக, உலகம் அஞ்ஞானம் நீங்கி ஆத்மீக விழிப்படைதற்காக, என் அகத்தில் தோன்றினாள்.

ஒரு நாள் ஒரு கனவு கண்டேன். என் உடம்பும் பெண்ணுருவாக மாறியது. எங்கு பார்த்தாலும் பெண்கள் படுந் துயரம் என்னைத் திகிலுறச் செய்தது. கல்வி யறிவில்லாமல் பெண்கள் கடுந்துயரில் அகப்பட்டு உழன்றனர். ஆண்களோ, தங்கள் சரீர இன்பத்தையே பெரிதாக மதித்தனர். நான் மிகவும் துன்புற்றேன். பின்புதான் மேலே கூறியபடி பராசக்தி என்னுள் தோன்றினாள். "மகனே! பெண்களின் நிலைமை இப்படி யானதற்குக் காரணம், கல்வி யில்லாததுதான்.

''நிலத்தின் தன்மை பயிர்க்குள தாகுமாம்,
நீசத் தொண்டும் மடமையுங் கொண்டதாய்
நலத்தின் மாண்புயர் மக்களைப் பெற்றிடல்
சால வேயரி தாவதொர் செய்தியாம்.''

ஆதலால் வருங்கால சந்ததிக்காகவும், முதலில் நமது ஸ்திரீகளுக்குக் கல்வி யளிக்க வேண்டும். அறிவு தெளிந்தால், உடனே அவர்களைப் பிடித்திருக்கும் அஞ்ஞானம் நீங்கும். இனிமேல் சிறிது காலத்திற்குள்ளாகவே பார், பெண்கள் சமூகம் விழிப்படைந்துவிடும். பழைய பொய்களையும், மூடக் கட்டுப்பாடுகளையும் தகர்த்தெறிந்து வேதகாலத்துப் பெண்களைப்போல வாழ்வார்கள். அவர்களது வீரக்

குழந்தைகள் நம் பாரத நாட்டை மேன்மையுறச் செய்வார்கள். நீ கவலையை ஒழி என்றாள். "போற்றி போற்றி ஜய ஜய போற்றி" என்று அவள் பொன்னடியில் விழுந்து வணங்கினேன். கண்ணை விழித்தேன். கனவு. யான் பெண்ணுருக் கொண்டு கனவிலேனும் அந்தக் கஷ்டத்தை நன்கறிந்திருப்பதால், எனக்கு அவர்கள் படும் துயரம் நன்றாகத் தெரியும். கனவில் நான் பட்ட கஷ்டத்தைக் கதையாகப் பின்பு சொல்லுகிறேன் என்றார்.

'சரி. கதைபோதும் இன்று கவிதைப் பாடம் நடக்கட்டும்' என்றார் தந்தை. நாங்கள் தனித்தனியாகவும், சில சமயம் இரண்டு பேரும் சேர்ந்து எழுதுவோம். என் தங்கை பாப்பாவின் பாட்டு,

மாணிக்க மேடையில், மான் விளையாடையில்
சகியே! நாமிருவரும் செல்வோமே.
குயில்கள் மயில்கள் எல்லாம்
குடியிருக்கும் சோலையில்
கூடி நாமிருவரும் செல்வோமே.
ஆண்களில்லாக் காட்டில், பெண்களரசாட்சியில்
சகியே ! நாமிருவரும் செல்வோமே.

இந்தப் பாட்டு எழுதும்போது, பாப்பாவுக்கு வயது மூன்று.



## ரமணி

புதுவை நல்லோருக்குப் புகலிடம் அளித்ததைப்போல வே, துஷ்டர்களுக்கும் தீயசெயல் புரிபவருக்குந் தகுந்த இடமாக அமைந்தது. பிரிட்டிஷ் இந்தியாவில் பெருந்தவறு செய்தவர்களும் புதுவையில் அரசாங்கத்தின் பயமின்றி நிம்மதியாக வாழலாம். பிரிட்டிஷ் ராஜ்யத்தில் அவமதிப் புக்குள்ளானவர்களும் புதுவையில் மதிப்புடன் வாழலாம். எங்கள் வீட்டுக்கு நேர் எதிர்வீட்டிற்கு ஒரு நாள் நாலைந்து வண்டிகளில் சாமான்கள் வந்திறங்கின. "யாராவது பெரிய உத்தியோகஸ்தர்கள் வருவார்கள்" என்று நாங்கள் கூறினோம். தந்தையார் "இல்லை. துன்பப்பட்டு, தலைமறை வாக வசிக்க விரும்புபவர்கள் வருவார்கள்" என்று கூறி னார். கடைசியாக வந்த காரில் ஒரு யுவதி இருந்தாள். இருபத்தைந்து வயதிருக்கும். அவளைவிட வயதில் மூத்தவ ளான ஒரு ஸ்திரீயும் அவளும் வந்திறங்கினார்கள். அவர் கள் கூட வந்தவர்கள் சென்றார்கள். இரண்டு ஸ்திரீகளும் உள்ளே சென்றார்கள்.

அவர்கள் ஒரே யொரு வேலையாள் மட்டும் வைத் திருந்தார்கள். இப்படிப் பெண்கள் தனியே குடித்தனம் செய்வதைப் பார்த்தால் போக்கிரிகளின் குஷிக்குக் கேட்கவா வேண்டும்? இரண்டு இரண்டு பேர்களாக வாச லில் வந்து உலாவுவது, ஆபாசமான நாடகப் பாட்டுகளைப் பாடுவது, கதவு திறந்திருந்தால், பெருந்தன்மையான மனி தர்களைப்போல் உள்ளே நுழைந்து பேசுவது என்று ஆரம் பித்து, அந்த வீட்டில் எப்போதும் கூட்டம் போட ஆரம் பித்தார்கள். வந்திருந்த பெண்ணோ வைரங்கள் ஒளியிடும் ஆபரணங்கள் நிறைய அணிந்து, சாக்ஷாத் ரதிதேவியைப்

போல் தோற்றமளிப்பதால், அவளது முகதரிசனத்திற்காகத் தேனைத் தேடிவரும் வண்டுகளைப்போல், புருஷர் கூட்டம் மொய்க்க ஆரம்பித்தது. தந்தையாருக்கு ஆட்களின் நோட்டம் ரொம்பத் தெரியும். "அடடா! என்ன மனிதர்! என்ன சுபாவம்! தனித்திருக்கும் பெண்களைக் கெடுக்க இவர்கள் வலை விரிக்கிறார்களே! அந்தப் பெண் இவர்கள் வலையில் சிக்காதிருக்க வேண்டுமே" என்று ரொம்பவும் கவலைப்படுவார். தாயார் உங்களுக்கென்ன? எப்படியேனும் போகட்டுமே! பிறர் காரியத்தைப்பற்றி நமக்கென்ன? என்பார். தந்தை "பார் அவள் தனியே என்னிடம் வந்து சேருவாள்." இதைத் தாயார் காதில் போட்டுக்கொள்ள வில்லை. நாலு நாள் கழித்து இரவு பதினொரு மணியிருக்கும். கதவைத் தட்டும் சத்தம் கேட்டது. யார் என்று பார்த்தேன். வேறு யாருமில்லை. எதிர் வீட்டுப் பெண் நின்றுகொண்டிருந்தாள். "அப்பாவை வந்து நான் தரிசிக்கலாமா என்று கேட்டுச் சொல்லம்மா?" என்றாள். நான் உடனே யழைத்துக்கொண்டு மாடிக்குச் சென்றேன். அவள் சிறிது லஜ்ஜையோடு தந்தையை வணங்கினாள். தந்தை அவளை அன்புடன் வரவேற்றுப் பேசினார்.

அவள்:—ஸ்வாமி! என்னைப் பலவித இடைஞ்சல்கள் சூழ்ந்து நிற்கின்றன. அவைகளைக் கூறுவதென்றால் மிக விரிவா யிருக்கும். தங்களது உயர்ந்த நேரத்தை என் துயரங்களை எடுத்துக்கூறி வீணாக்க எனக்கு விருப்பமில்லை. ஆயினும் தம்மைப்போன்றவர்களின் உபதேசங்கள் மூலமாக எனது பாபங்கள் விலகும் என்று ஒரு எண்ணம் அடிக்கடி என் மனத்தில் எழுந்துகொண்டிருப்பதால், தங்களிடம் சில விஷயங்கள் மட்டும் கேட்கிறேன். கூற வேண்டும். "உனக்கு என்ன வேண்டுமானாலும் கேளம்மா" என்றார் தந்தை. இதைக் கேட்டதும் வெட்கத்தினாலும், துயரத்தினாலும் மனம் வேதனைப்படுவதை அவள் முகம் காட்டிற்று. தந்தை, அம்மா உன் பெயர் என்ன என்றார்.

அவள் கூறினுள். தன் பெயரை வெளியிடக் கூடாதென்று அவள் கேட்டுக்கொண்டதற் கிணங்க மாற்றி - அவளை ரமணி என்ற பெயரில் கூறுகிறேன்.

ரமணி கூறுகிருள். "நான் குலதர்மத்தைத் தவற விட்டவள். அந்நிய குலத்து வாலிபருடன் நட்புக்கொண்டேன். அதன் காரணமாக பந்துக்களாலும் ஊராராலும், நிராகரிக்கப்பட்டேன். சிறு வயதிலேயே எனக்கு விவாகம் செய்துவிட்டார்கள். ஏனே தெரியவில்லை, என் கணவரை எனக்கு ஏற்றவராக என் மனம் ஒப்புக்கொள்ளவில்லை. என் அன்பைக் கவர்ந்த வாலிபரோ, நாடறிய என்னை மறுமணம் புரிந்துகொள்ளத் தைரியமில்லா திருக்கிருர். ஏராளமாய் எனக்குப் பணம் கொடுக்கிருர். ஆனல், என் மனமோ அதைக் கண்டு சிறிதும் சமாதானமடைவதில்லை. மனது சாந்தியென்பதைக் கனவிலும் காணமுடியவில்லை." தந்தை அவள் வார்த்தைகளைக் கேட்டுத் துடிதுடித்துப் போனர். "நான் நினைத்தது போலவே யிருக்கிறது உன்நிலை. ஆடவர்களின் படுமோச வலைக்குள் ஆட்டுக் குட்டிகளைப் போல விழுந்துவிடுகிருர்கள் பெண்கள். சமூகம், வழக்கம், இவைகளுக்குக் கட்டுப்பட்டு ஒரு ஆடவனும் தன் மனத்தைக் கட்டுப்படுத்திக்கொள்வ தில்லை. கள்ள நட்புக்கு இத்தனை எதிர்ப்பு இருந்தும் அது முறையாக நடைபெற்றுக்கொண்டுதான் வருகிறது. இதற்கெல்லாம் காரணம் நமது ஒழுங்கற்ற விவாக முறையே. உயர்வு தாழ்வு பார்ப்பதோ கேட்கவே வேண்டாம். ஆண் உயர்வு, பெண் தாழ்ந்தவள். பணக்காரன் உசத்தி; ஏழை கீழ்ப்பட்டவன். உத்தியோகஸ்தன் பெரியவன், குடித்தனக்காரன் கேலிக்குரியவன். இப்படியெல்லாம் சொல்லிக்கொண்டு வலியவர் எளியோரை வருத்துவது இந் நாட்டில் எங்கும் சகஜமாய்ப் போய்விட்டது. நீ ஒரு காரியம் செய். பேசிப் பிரயோசனம் இல்லை. உன் கையில் அகப்பட்ட பணத்தை விட்டுவிடாதே! இந்த உலகில் அழகு சாச்வதமில்லை.

உன் யௌவனம் சாச்வதமில்லை. நீ இத்தனை சௌந்தர்ய வதியா யிருக்கும்போதே, இத்தனை கஷ்டப்படுகிறாய். வயதாகி, அழகும் போய்விட்டால் உன் காதலன் உன்னைத் திரும்பியும் பாரான். உனக்கு அவன் பேரில் காதலிருப்பது உண்மையா யிருக்கலாம். அவனுக்கு உன்பேரில் உள்ளன்பு இல்லையென்பது தெளிவாய்த் தெரிகிறது. உன் மனத்தை, உன் காலத்தை, கழிந்துபோன உன் வாழ்நாளை நினைத்து நினைத்து வருந்தாமல்கழிக்க வேண்டியதுஅவசியம்; அதற்கு வேண்டிய கல்வி உனக்கு இருக்கிறது ; தைரியமும் இருக்கிறது. தன் வேலையைச் செய்து அதனுல் ஏற்படும் பயனை அநுபவிக்கும் சமயம் ஏற்படும் மகிழ்ச்சியைக் காட்டிலும், பிறர்க்கு உதவி, பிறர் நலத்திற்காகப் பாடுபட்டு அதனுல் ஏற்படும் பயனில் நாம் அதிக மகிழ்ச்சியை யடையலாம் என்று நான் அநுபவத்தில் அறிந்திருக்கிறேன். அதனுல் உனக்கு இஷ்டமான தொழில் புரிந்து, அதன்மூலம் தேசத்திற்கு சேவை புரிய வேண்டும். உன் வியாகூலம் மாற இதுவே சிறந்த வழி என்று எனக்குத் தோன்றுகிறது.''

தந்தை இப்படிக் கூறியதும் ரமணி கண்ணீரோடு தந்தையின் பாதங்களில் விழுந்து நமஸ்கரித்து '' குருவே! தெரிந்துகொண்டேன் '' என்று கூறித் தனது ஆபரணங்களை ஒவ்வொன்ருகக் கழற்றித் தந்தையாரிடம் கொடுத்து இவைகளைத் தாங்கள் தான் காப்பாற்றிக் கொடுக்க வேண்டும் எனவும், தந்தையார் அம்மாஎனக்குப் பணத்தை வைத்துப் பத்திரப்படுத்தத் தெரியாது. என் வீடும் சத்திரம்போல் யாரும் வருவதும் போவதுமாய் இருக்கும். நீயே இவைகளை விற்றுப் பணமாக்கி, நிலத்திலோ வீட்டிலோ அதைப்போட்டு வைத்துக்கொள்ளுவது நல்லது என்ருர். ஆனுலும், அவன் அவ்வூரில் உள்ளவரை, நகைகளை நாங்களே பத்திரப்படுத்திக் கொடுக்கும்படியாயிற்று.

## நச்சுப்பிச்சு

தந்தை ராமாயணம் வாசித்துக்கொண் டிருந்தார். நண்பர் குவளைக் கிருஷ்ணன் அதைப் பார்த்துவிட்டு "ஸ்வாமி! ஸ்திரீகள் அதிக தயைகொண்டவர்கள் என்று கூறுகிறார்களே! சூர்ப்பனகையாலும், சீதையாலுங்கூட ராமனுக்குத் துன்பம் அதிகமாக ஏற்பட்டதே தவிர வேறொன்று மில்லை. சீதையின் அகம்பாவம் கொண்ட தன்மையினால் ராமன் எப்போதும் கஷ்டப்படும் படிதானே ஏற்பட்டது. 'நச்சுபிச்சென்று' வேண்டாத விஷயங்களுக் கெல்லாம் கேள்வி கேட்டுத் தொல்லைப் படுத்துகிறார்கள். அது நம்மால் சகிக்கவே முடிவதில்லை" என்றார். எனக்கு அதைக் கேட்டுக் கோபம் வந்தது. ஏனெனில் அப்பாவை நண்பர் குவளை படுத்தும் பாடு சொல்லி முடியாது. அநாவசியக் கேள்வி கேட்பதில் அவரை மிஞ்ச ஒருவராலும் முடியாது. அப்படியிருக்க, சீதை பேரில் கூடப் பிசகு கண்டுபிடித்துவிட்டாரே என்று. அப்பா இதை யுணர்ந்து, "கிருஷ்ணா! நீ கேட்பதற்குச் சீக்கிரம் பதில் சொல்ல முடியாது. ஸ்திரீகளின் தன்மையை அறியாததால்தான் நீ இவ்விதம் கூறினாய். முதலில் நான் சொல்லுவதைக் கவனி! ராமனும் சீதையும் ஒருவருக்கொருவர் எத்தகைய பிரேமை செலுத்தினார்கள்? எப்படி இல்லறம் நடத்தினார்கள் என்பதைப் பார்ப்போம். நீ இப்போது சீதை நச்சுப்பிச்சென்று கேள்வி கேட்டு ராமனை இம்சித்தாள் என்று கூறினா யல்லவா? பெண்களின் ஒவ்வொரு செய்கையிலும் கருணை மிஞ்சியிருக்கும். ஒரு அரசகுமாரி, சக்ரவர்த்தியின் மனைவி, இளம் பெண் பிதுர்வாக்கிய பரிபாலனஞ் செய்ய வேண்டும் என்ற காரணத்திற்

காக, அரச பீடத்தைத் துறந்து செல்லும் கணவனுடன் அஞ்சா நெஞ்சத்தோடு கானகத்திற்குச் செல்ல வேண்டு மானால், எத்தனை சகிப்புத்தன்மையும், தயவு நிறைந்த உள்ளமும் இருந்திருக்க வேண்டும்! நான் இப்பொழுது ராமாயணத்தில் வாசிக்கும் பகுதி, சீதையும் ராமனும் ஆரண்யத்தில் வசிக்கும்பொழுது, சீதை மிகுந்த ஜீவ தயை யோடு ராக்ஷஸர்களைக்கூட வதை செய்யலாகா தென்று ராமனை வேண்டிக்கொள்ளும் கட்டம். அதைக் கூறுகி றேன் கேளுங்கள். பின்பு தற்சமயம் விவாதம் ஏற்பட்ட இடத்தில் விளக்கிக் கூறுகிறேன்" என்றார். அவர் கூறிய கதைதான் பின்னால் எழுதப்பட்டிருக்கிறது.

ராமன் :—கண்ணே சீதே! என்ன மனோகரமான காட்சி! உட்கார்.

சீதை :—பிரபோ! என்ன காரணமோ அறியேன்; என் மனம் குழம்புகிறது. ஏதோ கெடுதல் வருவதற்கு இது ஒரு அறிகுறி யென்று நினைக்கிறேன்.

ராமன் :—பிரியே! வீணில் உனது மிருதுவான உள் ளத்தைக் குழப்பிக்கொள்ளாதே! வருவது வந்தே தீரும். நமது இச்சைப்படி ஒரு காரியமும் நடப்பதில்லை.

சீதை :—ஸ்வாமி! தங்கள் காரியங்களே ஒரு வித மானது. எனக்கு என்னமோ இந்த ரிஷிகளைக் கண்டாலே பயமா யிருக்கிறது. அவர்கள்தான் நம்மைத் துன்புறுத்து கிறார்கள்.

ராமன் :—[கலீரென்று நகைத்து] சீதா! எதற்குப் பயம்? அவர்கள் நம்மைத் தஞ்சமென்று நம்பிச் சரண் அடைந்திருக்கிறார்கள். அவர்கள் ஆசீர்வாத அநுக்கிரஹத் தினாலேயே நாம் பதினாலு வருஷம் வனவாஸம் செய்து திரும்பவும் நாடாளப் போவோம்.

சீதை :—ரகுநந்தனா! தங்களுக்குத் தெரியாத விஷய மில்லை. இருந்தாலும் ஒரு விஷயத்தில் சிறிது சந்தேகம் உண்டாகிறது.

ராமன் :—கண்ணே ! என்ன விஷயம் ? அதைப் பயப்படாமல் சொல்லு.

சீதை :—நாதா ! சொல்லுவதற்கு அஞ்சுகிறேன். முற்றுமுணர்ந்த தங்களுக்குப் பேதை நான் என்ன சொல்ல முடியும் ?

ராமன் :—சீதா ! என் மனதில் ஒரு ஆவலை உண்டு பண்ணிவிட்டது உன் வார்த்தை. உனது கருத்தைத் தெரிந்துகொள்ளாமல் இனி ஒரு விநாடியும் இரேன். என்னதான் தெரிந்தவனானாலும், மற்றவர் மனதை யறியாதவன், அதுவும் தன் உயிர்த் தோழியின் மனதிலிருக்கும் எண்ணத்தை தெரிந்துகொள்ளாவிட்டால் - என்ன பயன்? என்னை, எல்லாந் தெரிந்தவன் என்று கூற முடியுமா ?

சீதை :—பிரபோ, ரிஷி ஸுதீக்ஷ்ணரின் உத்திரவும் ஆசீர்வாதமும் பெற்று நாம் இங்கு வந்திருக்கிறோம். நீங்கள் செய்துவரும் தர்மம் - அதாவது அஹிம்சை - எளிதில் அடைய முடியாதது, யாரும் அநுஷ்டிப்பதற்குக் கஷ்டமானது. இந்த தர்மம் தங்களைப்போல் மூன்று விதக் கவலைகளையும்விட்டவர்களால்தான் அநுஷ்டிக்க முடியும்.

ராமன் :—[சிரித்துக்கொண்டு] தேவி ! உன் மனதிலுள்ள விஷயங்களைச் சற்று விரிவாகக் கூறு. கவனித்துப் பின்பு அதற்குக் காரணங்களும் கூறுகிறேன்.

சீதை :—அரசர்க்கரசே ! நான் சொன்னவற்றில் முதலாவது கவலை, பொய் பேசல். இரண்டாவது பிறர் பத்தினியை நாடுவது. மூன்றாவது துஷ்டனா யிருப்பது. ஸ்வாமி ! நீங்கள் இதுவரை பொய் பேசியதுமில்லை. பேசப் போவதுமில்லை. தங்களுக்கு அந்நிய ஸ்திரீகளிடத்தில் ஆசை யுண்டாகுமா ? ராமா ! ராஜ குமார ! ஸத்ய ஸந்தரே ! தர்ம சீலரே ! பிதுர்வாக்கிய பரிபாலனத்திற்கு அணுவளவும் தவறாது நடந்துகொள்பவரே ! ஸத்யமும் தர்மமும் உங்களிடத்தில் நிலைபெற்றிருக்கிறது. தங்களுக்கு

சத்தியத்தையும், தர்மத்தையும் நடத்துவதற்கு ஐம்புலன்களையும் அடக்கும் சக்தி யிருப்பதனுல் முடிகிறது. இத்தனை பலம் பொருந்திய தங்களுக்கு ஒரு விஷயத்தில் மட்டும், அதாவது-இந்த ராக்ஷஸர்களைக் கொல்கிறேனென்று சபதம் செய்திருப்பது - எனக்கு ஒரு குறைவாகத் தோன்றுகிறது. மனம் அசாந்தமடைந்து தத்தளிக்கிறது. தாங்கள் தம்பியோடு தண்டகா வனத்திற்குப் புறப்பட்டீர்கள். தாங்கள் புறப்பட்டதையும், எதிலும் பின்வாங்காத தங்கள் மனோவுறுதியையும் கண்டு என் மனம் வியாகூலம் அடைகிறது. தங்கள் க்ஷேமத்தையே-ஹிதத்தையே-நான் எதிர்பார்த்திருப்பதால்.........

ராமன் :—தேவி! நீ சொல்லுவது ரொம்ப சரி. உன் சந்தேகங்கள் பூராவும் கூறு.

சீதை :—வல்லவரே! முதலில் தண்டகா வனம் செல்வதே எனக்குப் பிரியமில்லை. நாதா! நான் இப்போது சொல்லப் போவது - உபதேசம் செய்யும் நோக்கத்தோடல்ல. தங்கள் மேலுள்ள அன்பினுல்த்தான். தாங்கள் என்மேல் வைத்திருக்கும் அன்பும் நான் அறிவேன். தாங்கள் கையில் பாணமும் வில்லுமாகப் புறப்பட்டதே பிசகு. க்ஷத்ரியர்களுக்குக் கையிலுள்ள வில்லும் அக்னிக்குப் பக்கத்திலிருக்கும் விறகும் தேஜஸை வளர்க்கும்.

ராமன் :—சீதா! உன் கருத்தை உணர்ந்தேன். அறத்திற்குக் காப்பாளியான அந்தணர்கள் ராக்ஷஸர்களினுல் துன்புறுத்தப்படுகிருர்கள். எத்தனையோ நியமத்தோடு இருக்கும் முனிவர்களை மாமிச பட்சணிகளான ராக்ஷஸர்கள் பட்சிக்கிருர்கள். அந்த முனிவர்கள் என்னிடம் வந்து "எங்களை ரக்ஷிக்க வேண்டும்" என்று கேட்டார்கள்.

சீதை :—நாதா! உயர்ந்த தவத்தையுடைய முனிபுங்கவர்களால் கொடிய நடத்தை கொண்ட ராக்ஷஸர்களை வதைக்க முடியாதா? அவர்கள் "தாங்கள் ஹிம்ஸை செய்யலாகாதென்று கருதி, தங்களை அந்த ஹிம்ஸைத்

தொழிலைச் செய்யும்படி வற்புறுத்துகிறீர்களே! அது நியாயமா?

ராமன் :—சீதா ! நல்ல கேள்வி கேட்டாய். அந்த ரிஷிகள் மனம் வைத்தால் ராக்ஷஸர்களை நொடியில் பொடிப்பொடியாக்க முடியும். ஆயினும் வெகு காலமாக உலக க்ஷேமத்திற்காகச் செய்த அருந் தவங்களை, இவ் வண்ணம் வீணுக்க அவர்கள் விரும்பவில்லை. தவம் செய் வதற்கு எத்தனையோ விக்கினங்கள் ஏற்படும். அதற்காக அவர்கள் பொறுமை யிழந்து தவத்தைக் குலைத்துக் கொள்ள முடியுமா? வைதேகி! ரிஷிகளாக வந்து பிரார்த்திக்காம லிருந்தால்கூட இது நானுகவே செய்ய வேண்டிய தர்மம். பிரதிக்ஞையும் செய்தாகிவிட்டது. நான் பிராணனைவிட்டாலும் விடுவேன். பிரதிக்ஞா பங் கம் மட்டும் செய்ய மாட்டேன். தேவி! ஜீவராசிகளிடம் அளவற்ற தயையுண்டு. அதனுல் நீ இவ்விதங் கூறுகிருய். உனது ஹிதோபதேசம் எனக்கு அளவற்ற மகிழ்ச்சியை யுண்டாக்குகிறது.

சீதை :—ஸ்வாமி! அறிந்தேன். கடமையை, தர் மத்தை மறவாத தங்களது மனேவுறுதியை, திடத்தை மெச்சுகிறேன்.

ராமன் :—காதலி! ஒருவன் மிக அறிவாளியா யிருக்க லாம். ஆனுல் அவன் தனது பிசகை மற்றவர் கூறும் போது, பொருமையுடன் கேட்டு, அதன்படி திருத்திக் கொள்வது மிக அறிதான விஷயம். நீ பெரிய அறிஞர் களைக் காட்டிலும் உயர்ந்தவள்.

சீதை :—நாதா! [வெட்கத்துடன்] என்னைப் புகழா தீர்கள்.

குவளை :—இந்தக் கதையும் நான் சொல்லுவதைத் தானே ஊர்ஜிதம் செய்கிறது?

நான் :—எப்படி? கணவன் தப்புச் செய்யும் சமயம் இதமாக எடுத்துக்கூறி, அவன் மனதைத் திருப்புவதற்

காக அல்லவா ? அத்தனை நயமாகவும் பக்தியுடனும் சீதை பேசுகிறாள். இதா நச்சுப்பிச்சுக் கேள்வி ?

தந்தை:—நீங்கள் இருவரும் ஏன் யுத்தம் செய்திருக்கிறீர்கள் ? இரண்டு பக்கத்திலும் நியாயம் இருக்கிறது. சீதையும் தன் கட்சியைப் பக்குவமாகப் பேசுகிறாள். ராமனும் தன் கடமையை அவளுக்கு ஞாபகப்படுத்தி, தனது கட்சியில் அவளை இழுத்துக்கொள்கிறான். வாழ்க்கையில் புருஷனுக்கும் மனைவிக்கும் எத்தனையோ அபிப்பிராய பேதங்கள் ஏற்படும். அதை, சீதையும் ராமனும்போல் தீர்த்துக்கொண்டால் இல்லறம் நல்லறமாகும்.



## நவயுக அனுஸூயா

புதுவையில் எனது தோழியர் எல்லாம் ஒன்று சேர்ந்து, எங்கள் வீட்டில் கொம்மாளம் அடிப்போம். தந்தையார் எங்களுக்கு 'விடுதலை' மந்திரத்தை உபதேசித்தார். குழந்தைகளாகிய எங்களுக்கு அதைக் கேட்டதும் உண்டான மகிழ்ச்சி சொல்லி முடியாது. இளமையின் செறுக்கும் புதுமையான ஆனந்தமும் உபதேசிக்கும் குருவின் ஒளிபெற்ற நம்பிக்கை நிறைந்த புதிய புதிய கருத்துக்கள் நிறைந்த சம்பாஷணைகளும் கேட்கும்போது சிறுமிகளாகிய எங்களுக்கு "நாம் இருப்பது பூலோகம் என்பதை மறந்து, துன்பக் கலப்பற்ற இன்பம் நிறைந்த வானுலகம்" என்ற நினைவு தோன்றும். நாங்கள் ஒவ்வொருவரும் "நாம் பெரியவளாகிக் குடித்தனம் செய்யும் பொழுது, இப்போதைய ஸ்திரீகளைப்போல் குடித்தனம் நடத்தலாகாது. ஒரு புது மாதிரியான விடுதலை பெற்ற வாழ்க்கை நடத்த வேண்டும். நமது கணவர் நமது எஜமானராக இருந்து, நம்மை அடிமையாக நடத்தாமல் சகதர்மிணியாக, நமது உற்ற துணையாக, நம்மைக் கருதும்படி நாம் நடக்க வேண்டும்" என்றெல்லாம் பேசிக்கொள்வோம். தந்தையார் எங்கள் பேச்சைச் சற்று தூரத்திலிருந்து கேட்டு ரஸித்துக்கொண்டிருப்பார். எங்களில் ஒரு பெண்ணின் தாய் தந்தையர் சற்று கர்நாடகப் பேர்வழிகள். அவள் எங்களிடம் "பெண்களாகிய நம்மால் எப்படிப் புருஷர் இல்லாமல் காலங்கழிக்க முடியும்? நமக்கு சரீரத்தில் பலமில்லையே. ஆண்கள் இயற்கையிலேயே சரீர பலத்தைப் பெற்றிருக்கிறார்கள். நமது விடுதலை என்பதெல்லாம் வாய்பேச்சோடு முடிந்துவிடும் என்றல்லவோ தோன்றுகிறது" என்ற கேள்வியைக் கேட்டாள். அந்தக்

கேள்வி எங்களை எல்லாம் குண்டு விழுந்ததைப்போல் அதிர்ச்சி யடையச் செய்தது. ஒவ்வொருவரும் ஒவ்வொரு பதிலைச் சொன்னோம். அன்றுதான் புதிதாக வந்திருந் தாள் ஒரு பெண். அவள் கூறினாள், "நன்றா யிருக்கிறதே உன் கேள்வி. ராக்ஷஸன் போல சரீர பலம் எதற்கு? மனத் தில் அல்லவா தைரியம் வேண்டும்? எத்தனையோ யானை பலங்கொண்ட ராக்ஷஸர்களைத் தபோ பலத்தினால் அருகில் வராமல் முனிவர்கள் தடுத்துக்கொள்ள வில்லையா?" அந்தப் பெண்ணின் பேச்சு எங்களைத் திடமடையச் செய் தது. அவள் தந்தையாரைப் பார்த்து, "பாரதியாரே! தங்கள் புதுமைப் பெண்ணை சில மாதங்களுக்குமுன் படித்தேன். அது என் மனதை மிகவும் தைரியப்படுத்தி யது. இந்தப் பெண்களைப்போல் நானும் மிகவும் பயப் பட்டுக்கொண் டிருந்தேன். நான் ஒரு பால்ய விதவை. எனது தந்தை என்னைப் படிக்க வைத்தார். கிராமத்தில் அவரைப் பகிஷ்காரம் செய்தார்கள். பின்பு நகரத்தில் குடியேறினோம். என் தங்கைக்கு விவாஹம் செய்ய எண்ணினார். மிகவும் சிரமப்பட்டதன்மேல் ஒரு வரன் கிடைத்தது, நல்ல வரன். டாக்டர் பரீட்சை பாஸ்பண்ணி —பிராக்டீஸ் பண்ண ஆரம்பித்திருக்கிறான். நானும் 'இண்டர்மீடியேட்' பாஸ் செய்திருக்கிறேன். ஒரு முக்கிய மான சந்தர்ப்பத்தில் உங்கள் பாட்டு எனக்கு மிகவும் பயனளித்தது. அதைச் சொல்லிவிட்டு, தங்களை நேரில் தரி சித்துவிட்டுப் போவதற்காகத்தான் இங்கு வந்தோம். என் தகப்பனார் அடுத்த தெருவில் இருக்கிறார். இன்னும் சிறிது நேரத்தில் இங்கு வருவார்" என்றாள்.

தந்தை மிகவும் சந்தோஷத்தோடு, "அம்மா, உன்னைப் பார்க்க ரொம்ப சந்தோஷப்படுகிறேன். பெண்கள் எல் லோரும் கல்வி யறிவு பெற்று, ஆத்மீக விழிப்பெய்தி, நம் நாட்டுப் பழைய காலத்து அனுஸூயை, சாவித்திரி முதலியவர்களைப்போல் இருக்க வேண்டும் என்றுதான்

நான் விரும்புகிறேன். வெறும் யந்திரங்களைப்போல், வீட்டு வேலை செய்வது, குழந்தைகளைப் பெறுவது இவையே தரும மென்று கருதிவிட்டார்கள் பெண்கள். அவர்களை இந்த நிலைக்குக் கொண்டுவந்த ஆண்கள், சிறிதும் இரக்கமின்றிக் காலங்கழித்து வருகிறார்கள்...... அது சரி. நீ ஏதோ விஷயம் சொன்னாயே, அது என்ன? என் பாட்டு உனக்கு எந்த விதத்தில் உதவியது; அதைக் கூறு" என்றார். அந்தப் பெண் தன் பெயரை வெளியிடக் கூடா தென்று கேட்டுக்கொண்டபடியால் அநுஸூயா என்று அழைக்கிறேன்.

அநுஸூயா கூறலானாள்:—என் குருவே! அந்த சம்ப வத்தைக் கூறும்பொழுது வாய் கூசுகிறது. எத்தனை கொடூரம்! எத்தனை சுயநலம் இந்த ஆண்களுக்கு! ஒவ் வொருவரும் தன்னைப்பற்றிக் கொண்டிருக்கும் பெரு மைக்கு அளவே கிடையாது. தன்னை இந்திர னென்றும் சந்திர னென்றும் நினைத்துக்கொள்கிறார்கள். நிற்க, என் தங்கையின் பெயர் சுந்தரி. பெயருக்கேற்ற அழகும் நற் குணமும் வாய்ந்தவள். கல்யாணத்தின்போது மாப்பிள்ளை சீதாராமனிடம் நான் நெருங்கிப் பழகவில்லை. பார்க்க வெகு அழகாயிருப்பான். அதோடு கல்வியறிவும் பெற்ற தனால் அவன் முகம் மிகுந்த சோபையோடு திகழ்ந்தது. என் தாய் தந்தையர் "நமது சுந்தரிக்கு இந்தக் கணவன் வாய்ந்தது அதிர்ஷ்ட வசம்தான்" என்ற உவகையினால் பூரித்தார்கள். பந்துக்கள் யாவரும் மாப்பிள்ளையைப் பார்த்து, பெருமையினால் விம்மினார்கள். சுந்தரி பாவம்! வெளுத்ததெல்லாம் பால் என்று கருதும் சுபாவமுள்ள வள். அவளும் கணவனைக் கண்டு மகிழ்ந்திருந்தாள். ஆனால் நான்......? நானும் மாப்பிள்ளையைப் பார்த்து மகிழ்வுடன்தான் இருந்தேன். அவனது சரீரத்தின் அழகு என்னை வசீகரிக்கவில்லை. அவனது அபாரமான கல்வி யறிவுக்கு நான் வசப்பட்டேன். கல்யாணமான பின்பு

அடுத்தடுத்து எங்கள் வீட்டிற்கு மாப்பிள்ளை வந்திருந்தான். டாக்டருக்கு வாசித்தனால் பெரிய அறிவாளியாய் விடுவானா என்று தாங்கள் கேட்கலாம். தொழில் படிப்பைத் தவிர, அறிவு வளர்ச்சிக்காகவும் இலக்கிய வளர்ச்சிக்காகவும் எப்போதும் சீதாராமன் படிப்பதிலேயே ஈடுபட்டிருப்பான். எனது தந்தை முதலியவர்களோடு சம்பாஷிக்கும் சமயங்களில் கவனித்திருக்கிறேன். பெரிய தத்துவ ஞானி, ஆசிரியரைப்போல் பிரசங்கம் செய்வான். நான் ஏற்கெனவே புருஷனற்றவள். படித்திருந்தாலும் அந்நிய புருஷரோடு அதிகமாய்ப் பழகக் கூடாது என்று தாயார் ஓயாமல் சொல்லிக்கொண்டிருப்பாள். அதனால் நான் அவனுடன் அதிகம் பேசுவது கிடையாது. ஆனால் எனது அகத்தி லுள்ள நிறைவை முகமலர்ச்சி தெரிவித்துவிடும். அப்போது நான் அதைக் குற்றமாக எண்ணவில்லை. ஆனால் சீதாராமனோ தன்னிடங்கொண்ட அன்பு என்று கருதி இருக்கிறான் என்று பின்னால் தெரிய வந்தது. என் தங்கை கருப்பமானாள். வெகு ஆடம்பரமாகவும் சிறப்பாகவும் வளைகாப்பு, ஸ்ரீமந்தம் முதலிய விசேடங்கள் நடந்தேறின. குழந்தையும் பிறந்தது; பெண் குழந்தை. அதற்கு நான் கண்ணம்மா என்று பெயர் வைத்து, எனது ஆசைதீரக் கொஞ்சுவேன். என் ஹிருதயத்தில் அடங்கி யிருந்த ஆசைகளை யெல்லாம் அன்பை யெல்லாம் குழந்தை தன்னிடத்தில் இழுத்துக்கொண்டது. குழந்தை பிறந்து ஆறு மாதமானவுடன் சீதாராமன் மனைவியையும் குழந்தையையும் அழைத்துப்போக வந்தான். என் தாயாரும், தங்கையும் ஏதோ குழந்தைக்குவேண்டிய சாமான்கள் வாங்கக் கடைத்தெருவிற்குச் சென்றார்கள். அப்பாவும் வீட்டில் இல்லை. நானும், குழந்தையும் ஒரு உள்ளில் படுத்துத் தூங்கிக்கொண்டிருந்தோம். நான் திடீரென்று விழித்துக்கொண்டேன். குழந்தை தூக்கத்தில் சிரித்துக்கொண்டிருந்தது.

நாளைக்குக் குழந்தை ஊருக்குப் போய்விட்டால் நாம் என்ன செய்யப் போகிறோம் என்று என் மனம் ஏங்கியது.

" பிள்ளைக் கனி யமுதே— கண்ணம்மா
பேசும் பொற் சித்திரமே "

என்று என் வாய் பாடியது.

" அள்ளி யணைத்திடவே— கண்முன்னே
ஆடி வருந் தேனே "

என்று அடுத்த உள்ளிலிருந்து பாட்டுச் சத்தம் கேட்டது. யார் குரல் என்று பார்த்தேன். விளங்கவில்லை.

" சொல்லு மழலை யிலே— கண்ணம்மா
துன்பங்கள் தீர்த்தி டுவாய் "

என்றேன்.

" முல்லைச் சிரிப் பாலே— எனது
மூர்க்கந் தவிர்த்தி டுவாய் "

என்று பதில் வந்தது. திடீரென்று சீதாராமன் எதிரில் வந்தான். என் கரங்களைப் பற்றினான். நான் அப்போதும் பரிசுத்தமானவன் என்ற நினைப்போடு, குழந்தையை எடுக்க வந்து தவறுதலாக நம்மைத் தீண்டிவிட்டான் போலும் என்று நினைத்தேன். பின்புதான் நான் நினைத்தது தவறு என்று தெரிந்தது.

" சோலை மல ரொளியோ— உனது
சுந்தரப் புன்னகை தான் "

என்றுஆரம்பித்தான் சீதாராமன். எனது கோபம் கட்டுக் கடங்காத தாயிற்று. அருகில் பழம் நறுக்குவதற்கு வைத்திருந்த கத்தியைக் கண்டதும், எடுத்து அவன் மார்பில் குத்திவிடலாமா என்றுகூட நினைத்தேன். ஆனால் நம்

தங்கை யல்லவா விதவையாகிவிடுவாள் என்று நினைத்துத் திகைத்தேன். பின்பு, அந்தச் சமயத்தில் உங்கள் பாட்டு ஞாபகத்திற்கு வந்தது.

*" பாதகஞ் செய்பவரைக் கண்டால்—நாம்*
*பயங்கொள்ளலாகாது—பாப்பா*
*மோதி மிதித்துவிடு பாப்பா—அவர்*
*முகத்தில் உமிழ்ந்துவிடு—பாப்பா."*

உடனே நிமிர்ந்து தைரியத்தோடு "சீதாராமா என்ன துணிவோடு நீ என்னைத் தீண்டினுய்?" என்று கர்ஜித்தேன். "உனது மோகனப் புன்னகைதான் இதற்குக் காரணம்" என்றுன் நடுங்கும் குரலுடன். எனக்கு இதைக் கேட்டதும் கோபம் போய், சிரிப்பு வந்து விட்டது. "பலே, நான் நகை முகத்தோடிருந்தால் உன் பேரில் மையலுற்றேன் என்று அர்த்தமா? நகை முகத்தோ டிருப்பது எனது குற்றமா? வெகு நன்று. உன் அறிவாற் றல் இத்துணை கீழ்த்தரமானதென்று நான் நினைக்கவில்லை. கீழ்மகனே!" என்றேன். சீதாராமன் கண்ணில் நீர் பெருக, "சகோதரி என்னை மன்னிக்க வேண்டும். மனத்தை அடக்கும் திறமில்லேன், நீ என்னைவிட வயதில் சிறியவளா யிருந்தபோதிலும் மனத்தை அடக்கி வசப்படுத்தி யிருக் கிருய். நீ ஒரு ஞானி" என்று வணங்கினுன். "மன்னித்து விட்டேன்" என்றேன். இந்தக் கதையைக் கேட்டு நாங்கள் எல்லோரும் ஆச்சரியப்பட்டோம். தந்தை களிப்போடு "ஆம் நீ நவயுகத்து அனுஸூயா தேவிதான்" என்றுர். என் தோழிகளில் ஒருத்தி கேட்டாள். "ஆமாம், நான் அந்த சீதாராமன் கட்சியில் பேசப் போகிறேன். தாங்கள் என் சந்தேகத்தைத் தீர்க்க வேண்டும்." தந்தை "சரி" என்றுர். "ஒரு அழகிய பெண் தன்னை எப்போதும் அன்போடு நோக்கினுல் ஆண்பிள்ளை மனது சஞ்சலந் தானே யடையும்? மேலும் பெண்மீதில் ஆசை தோன்று